# ஸ்ரீ ராமாநுஜன் 178.



சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 15 | 1963ளு நவம்பர்மீ<br>சோபகிருதுளு ஐப்பசிமீ | ஸஞ்சிகை 10. |
|---|---|---|

## திருவாய்மொழி நூற்றந்தாதி—66.

**ஏழையர்கள் நெஞ்சை யிளகுவிக்கு மாலழகு ***
**சூழவந்து தோன்றித் துயர்விளைக்க—ஆழுமனந்**
**தன்னுடனே யவ்வழகைத் தானுரைத்த மாறன்பால் *.**
**மன்னுமவர் தீவினைபோம் மாய்ந்து.**

| | | | |
|---|---|---|---|
| ஏழையர்கள் நெஞ்சை இளகுவிக்கும் | அபலைகளினுடைய மனத்தை உருக்க வல்லதான | அவ்வழகை | —அந்தவடிவழகை |
| மால் அழகு | —எம்பெருமானது அழகானது | தான் உரைத்த மாறன்பால் | அருளிச்செய்த ஆழ்வார் விஷயத்திலே |
| சூழ வந்து தோன்றி | நாற்புறமும் வந்து காட்சி தந்து | மன்னுமவர் | பொருந்தியிருப்பவர்களினுடைய |
| துயர் விளைக்க | —வருத்தந்தை உண்டாக்க | தீ வினை | —பாவங்களெல்லாம் |
| ஆழும் மனம் தன்னுடனே | ஈடுபட்ட மனத்துடனே | மாய்ந்து போம் | —உருவழிந்து போம். |

* * * கீழ்த்திருவாய்மொழியாகிய * பாமரு மூவுலகில் * வந்தெய்து மாறறியேன் மல்கு நீலச் சுடர் தழைப்ப * என்னும் பாசுரத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட விலக்ஷணமான வடிவழகானது திருவுள்ளத்திலே ஊற்றிருந்து அத்தையே இடையறாமல் பாவித்த பாவநா ப்ரகர்ஷத்தாலே அவ்வழகு ப்ரத்யக்ஷஸமமாய்த் தோற்றித் தனித்தனியும் திரளவும் ஒருமுகஞ் செய்து நலிய, தாம் நலிவு பட்டுச் சொல்லுகிற படியை உருவெளிப் பாட்டாலே நோவுபடுகிற வொரு பிராட்டி பாசுரமாக அருளிச் செய்ததாம் * ஏழையராவிப்பதிகம்.

கீழ்ப்பதிகத்திலே ஆழ்வார் கூப்பிட்ட கூப்பீடு பரமபதத்தளவுஞ்சென்று பரவாஸுதேவனுடைய திருச்செவியில் விழுந்திருக்குமென்னத் தட்டில்லை. அது கேட்ட அப்பெருமான் ஆழ்வாரை ஒருவாறு தேற்றுவிக்க உருவெளிப்பாடு தோன்றச் செய்தருளினன். அதாவது அவனுடைய திவ்யாவயவங்களை மாநஸ ஸாக்ஷாத்கார விஷயமாகப் பெற்றாராழ்வார். கண்ணுக்கு ப்ரத்யக்ஷமாகத் தோற்றாமே நெஞ்சுக்குமட்டும் ஸாக்ஷாத்கார விஷயமாகை உருவெளிப்பாடாம். அது இத்திருவாய்மொழியில் செல்லாநின்றது. இந்தப்பதிகம் பிராட்டி நிலைமையிலே நின்றுபேசுவதாம். தாய்மார்களையும் தோழிமார்களையும் நோக்கி 'எம்பெருமானுடைய வடிவழகு எனக்கு ப்ரத்யக்ஷஸமானமாய்த் தோற்றித் தனித்தனியும் திரளவும் ஒருமுகஞ்செய்து நலியாநின்றதே! இந்த நலிவுக்கு எங்ஙனே ஆற்றுவேனென்று அலமந்து பேசுகிறாளாயிற்று பராங்குச நாயகி. .... .... .... *

# "அழகுதிகழ்ந்திடு மைப்பிசியில் திருமூலம்."

இத்திருநன்னாள் மிகச் சிறந்த மஹோத்ஸவமாக ஸகல திவ்ய தேசங்களிலும் ஸகல மடங்களிலும் ஸகல பவனங்களிலும் கொண்டாடப்படுகின்றது. இத்திரு நன்னாளின் சிறப்பை இங்கு நாம் சிறிது அனுபவித்து ஆனந்திப்போம். திருநாள் பாட்டின் சீரிய பொருளைச் சுருங்கத் தெரிவிப்பதே இங்கு நம்முடைய அநுபவமாகும்.

**1.** செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடுநாள் :—"ப்ரபந்நஜந கூடஸ்தர் பராங்குச பரகால யதிவராதிகள்" என்ற ஆசார்யஹ்ருதய ஸூக்தியின்படி ப்ரபந்நஜந கூடஸ்தராய் விளங்கும் நம் ஆழ்வாராசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளில் ப்ராவண்யமுடைய ஸ்ரீ வைஷ்ணவர்கள் யாவரும் செந்தமிழ் வேதியரெனப்படுவர்; இவர்களுக்கு உபயவேதங்களும் நிரூபகமா யிருந்தாலும், செந்தமிழ் வேதத்தை வலக்கண்ணாகவும் வடமொழி வேதத்தை இடக்கண்ணாகவுங் கொண்ட இவர்கள் செந்தமிழ் வேதியரென்றே சிறப்பிக்கப்படுவர்கள். விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாய துரந்தரர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் யாவரும் செந்தமிழ் வேதியரென்ற சொல்லில் அடங்குவர்கள். அன்னவர்கள், மணவாளமாமுனிகள் திருவவதரித்தவன்றே சிந்தைதெளிந்து சிறந்து மகிழ்ந்திட்டார்கள். மாமுனிகளுக்கு முன் ஆழ்வார்களும் ஆசாரியர்கள் பலரும் அவதரித்திருந்தாலும், அவர்கள் பல பல திவ்ய ஸூக்திகளைப் பணித்திருந்தாலும் சாஸ்த்ரப்ரமேய ஸாரநிஷ்கர்ஷம் தெளிய விரகில்லாமையாலே தெளிவின்றிக்கே யிருந்த மானிடர்கள் இனி நாம் தெளிவுபெறக் குறையில்லையென்று துணிந்து மகிழ்ந்தார்களென்க. இதனால், மணவாளமாமுனிகள் திருவவதரித்துத் தாமருளிச் செய்த திவ்ய க்ரந்தங்களினால் செந்தமிழ் வேதியர் மகிழத் தெளிவு பெறுத்தினரென்றதாயிற்று.

**2.** சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசுபொலிந்திடுநாள்—எம்பெருமானாருக்கு முன்புள்ள முதலிகள் உபயவேதாந்த ஸாரப்பொருள்களையும் ரஸ்ய ரஹஸ்யார்த்தங்களையும் மிகவும் சேமித்துவைத்துக் கொண்டிருந்து வெகு ஏகாந்தமாகவே உபதேசித்து வந்தார்கள்; இப்படி வருகையில் எம்பெருமானார் தமது விசாலமான திருவுள்ளத்தில் ஸகல ஸம்ஸாரிகள் பக்கலிலும் கருணை கரைபுரண்டு வரம்புகடந்து தாம் உபதேசித்தும் தம்முடைய சிஷ்யர்களைக் கொண்டு உபதேசிப்பித்தும் போந்தார். இவ்விஷயம் "ஓராண்வழியா யுபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராசரின்னருளால் பாருலகி லாசை யுடையோர்க்கெல்லா மாரியர்காள்! கூறுமென்று பேசி வரம்பறுத்தார்பின்." என்ற உபதேச ரத்தினமாலைப் பாசுரத்தினாலும் விளங்கும். எம்பெருமானார் இவ்வளவு கருணைக்கடலாக இருந்தும் ஸத்ஸம்ப்ரதாய ஸாரப்பொருள்களை ஸ்ரீ பாஷ்ய கீதாபாஷ்யாதிகளில் ஆங்காங்கு பொறித்து வைத்தாரேயல்லது எளியநடையில் தெளியவைத்திலர். அக்குறை தீரப் பிள்ளை லோகாசாரியர் திருவவதரித்து அஷ்டாதச ரஹஸ்யங்கள் மூலமாக அரிய பெரிய அர்த்த விசேஷங்களை வெளியிட்டருளினர். அவற்றுள் ஸ்ரீவசன பூஷணமும் தத்வத்ரயமும் முமுக்ஷுப்படியுமாகிற மூன்று ப்ரபந்தங்கள் மிக முக்யமாய் ஸகலார்த்த புஷ்கலமா யிருந்தபடியாலும், வியாக்யானமின்றி அவற்றின் பொருளையறிவது மாஞானியர்க்கும் அரிதாதலாலும், மாமுனிகள் தம்முடைய விசதவாக் சிகாமணித்வம் விறுபெறுமாறு அவற்றுக்கு வியாக்கியான மருளிச் செய்கை

யாலே சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்ததாயிற்று. மாமுனிகளின் வியாக்கியானம் அவதரித்ததில்லை யென்றால், சீருலகாரியர் நற்கலைகள் செய்தருளியிருந்தும் பயனென்றுமில்லையாகும். அவங்றின் தேசு குன்றியே யிருக்கும். மஹா தேஜஸ்வியான மாமுனிகள் திருவவதரித்து அவற்றின் தேஜஸ்ஸை அதிசயிப்பித்தாராயிற்று.

3. மந்தமதிப்புவி மானிடர்தங்களை வானிலுயர்த்திடுநாள்—இருள் தருமா ஞாலமாகிய இப்புவியில் தோன்றும் மானிடர்கள் தத்வஹித புருஷார்த்தங்களில் ஒன்றையும் அறியப்பெறாதே மாறி மாறிப் பல பிறப்பும் பிறப்பதும், உண்டிராக்கிடக்கும்போது முடலுக்கே கரைந்து நைவதும், சாந்தேந்துமென் முலையார் தடந்தோள் புணரின்ப வெள்ளத்தாழ்ந்து அருநாகத்தழுந்தும் பயன்படைப்பதுமாயிருந்து, வானேறும் வழியைச் சிறிது மறியாதிருந்தார்கள். அவர்களின் துர்க்கதியைப் போக்கி, அறியாதவர்த்தங்களையுடைய அறிவித்து அவர்களை வாழ்விப்பதற்கென்றே மாமுனிகள் திருவவதரித்தருளினாராயிற்று. "யதவதரண மூலம் மூக்திமூலம் ப்ரஜாநாம்" என்கிற அஸ்மத் குல கூடஸ்த திவ்ய ஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம். வானில்—நித்யஸூரிகளிற் காட்டிலும் என்றுமாம்.

4. மாசறு ஞானியர் சேரெதிராசர்தம் வாழ்வு முளைத்திடு நாள்—பண்டே ஜகதாசார்யரான எம்பெருமானார் திருவவதரித்தருளி அரிய பெரிய காரியங்களைச் செய்தருளியிருந்தாலும் மாமுனிகள் திருவவதரித்த பின்பே அவை ஸுப்ரதிஷ்டிதங்களாயின வென்பது இதனால் விளங்கும். ப்ரமாண ப்ரமேய ப்ரமாதாக்கள் விஷயத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் ஸ்வாநுஷ்டான முகத்தாலும் ஸ்வோபதேச முகத்தாலும் செய்தருளினவற்றை மாமுனிகள் தாம் ப்ரதிஷ்டிதமாக்கியருளினாரென்று ப்ரஸித்தமாயிருக்கும். *தென்னரங்கர் செல்வம் முற்றும் எம்பெருமானாதீனமாயிருந்தது போலவே மாமுனிகளுக்கும் அதீனமாயிருந்தது, அவருடைய திருவுள்ளத்தில் குறையிருந்ததெல்லாம் மாமுனிகளால் நிறைவேறப் பெற்றதனால் எதிராசர் தம் வாழ்வு இன்றே முளைத்திட்டதாகக் கூறினவிது மிகவும் பொருந்தும்.

5. கந்தமலர்ப்பொழில் சூழ் குருகாதிபர் கலைகள் விளங்கிடுநாள்—குருகாதிபர்கலைகளென்றது நம்மாழ்வாரருளிச் செய்த நான்கு திவ்யப்ரபந்தங்களை மாத்திரமன்று. "நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே" என்றபடி நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் முழுவதும் நம்மாழ்வார் திருவாக்கிலிருந்தே வெளிவந்தவையாதலால், நாலாயிரமும் குருகாதிபர்கலைகளாக இங்கு விவக்ஷிதமென்னலாம். அவற்றுக்குத் திருக்குருகைப் பிரான் பிள்ளான், பெரியவாச்சான்பிள்ளை முதலானோர் வியாக்கியானங்களருளிச்செய்திருந்தாலும்,

"சேற்றுக் கமலவயல் சூழரங்கர்தம் சீர் தழைப்பப்
போற்றித் தொழுநல்ல அந்தணர் வாழவிப் பூதலத்தே
மாற்றற்ற செம்பொன் மணவாளமாமுனி வந்திலனேல்
ஆற்றில் கரைத்தபுளியல்லவோ தமிழாரணமே."

என்று அக்காலத்திலிருந்த அடியார்கள் வியந்து பேசும்படியும், *வாழி—திருவாய்மொழிப் பொருளை மாநிலத்தோர் தேறும்படி யுரைக்குஞ்சீர்* என்று உலகமெல்லாம் வாழ்த்தும்படியும் மாமுனிகள் திவ்யப்ரபந்த நிர்வாஹம் செய்தருளினபடி அநந்ய ஸாமாந்யமாதலால், திவ்யப்ரபந்தங்கள் மாமுனிகளின் காலத்திற்கு முன்பு அவ்வளவாக விளக்கமின்றியே

யிருந்து பின்பே ஒப்புயர்வற்ற விளக்கம் பெற்றுப் பொலிவுற்றன. *சுடரிபுமுநிஸ்ருஷ்ட ஆம்நாய ஸாம்ராஜ்ய மூலம்" என்ற அஸ்மத்குல கூடஸ்த ஸூக்தி இங்கே அநுஸந்தேயம்.

6. காரமர் மேனி அரங்கநகர்க்கிறை கண்கள் களித்திடுநாள்—அரங்கநாதன் இராம பிரானாகவும் கண்ணபிரானாகவும் திருவவதாரங்கள் செய்திருந்த காலத்தில் பல பேர்களிடத்திலே தான் பணிவுகாட்டிப்போந்தான்; விச்வாமித்ரமுனிவன், ஸுக்ரீவமஹாராஜர், ஸமுத்ர ராஜன், ஸாந்தீபநிமுனி என்றிப்படிப்பட்டவர்கள் பக்கலிலே வணங்கி நின்றான். முதலில் விச்வாமித்திருடைய சரித்திரங்களையுணராமல் அவரை ஒரு மஹர்ஷியாக ப்ரதிபத்திபண்ணி "இமௌ ஸ்ம முநிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம்" என்று சொல்லி அவர்க்குச் சேவகனாய் நின்றான்; பிறகு அஹல்யா சாபவிமோசனம் செய்தபின் சதானந்தர் வாயிலாக ஜநக ஸபையில் அம்முனிவருடைய சரிதைகளை விரிவாகக் கேட்டபின் இங்ஙனே ராஜஸரும் தாமஸருமான இவரையோ நாம் ஆசார்யனாகக் கொள்ளப்பெற்றது! என்று திருவுள்ளக் குறையுற்றிருந்தான். விச்வாமித்ரரும் ஸீதா விவாஹமான பின் இராம பிரானிடம் விடைபெற்றுக் கொள்ளவும் வெட்கப்பட்டுத் தலைமறைந்தார். * ஸுக்ரீவம் சரணம் கத: * என்ன நின்ற இராகவன் அந்த ஸுக்ரீவனிடத்திலும் ப்ரீதி நிலைநின்றிருக்கப் பெறாமல் இளையோன் மூலமாக * நச ஸங்குசித: பந்தா யேந வாலீ ஹதோ கத:* என்றும் * மா வாலிபத மந்வகா: * என்றும் * ஹநிஷ்யாமி ஸபாந்தவம் * என்றும் நிக்ரஹ ஸங்கல்பத்தை வெளியிடவேண்டியதாயிற்று. * ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி * என்ற விபீஷண வசனத்தின்படியே கடலரசன்பாடே சரணம் புகுந்து நின்றும் அங்கும் அப்ரீதியோடே தலைக்கட்டிற்று. * க்ரோத மாஹாரயத் தீவ்ரம் *ஸாகரம் சோஷயிஷ்யாமி* இத்யாதிகள் காண்க. ஸாந்தீபநிமுனிவன் பக்கலிலே குனிந்து வித்யாக்ரஹணம் பண்ணின கண்ணபிரானுக்கும் அம்முனிவனிடத்தில் அப்ரீதியே யாயிற்று. அவற்கு குருதக்ஷிணை ஸமர்ப்பிக்க விரும்பி 'என்ன அபேக்ஷிதம்?' என்று கேட்டபோது *மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான்* என்கிற படியே அந்த ஸாந்தீபநி என்றைக்கோ மறிகடல்வாய் மாண்டுபோன புதல்வனை மீட்டுக் கொடுக்குமாறு வேண்ட 'இங்ஙனம் லௌகிகமான பலனை விரும்புகின்ற இவரையா ஆசாரியனாகக் கொள்ளப் பெற்றோம்! என்று அவரிடத்திலும் எம்பிரானது நெஞ்சம் அப்ரீதி கொண்டிருந்தது. ஆக, விபவாவதாரங்களில் தான் தலைமடுத்தவிடமெல்லாம் தடுமாறிப் போகவே, பெருங்குறைவாளனான எம்பெருமான் அர்ச்சாவதாரத்திலாவது குறைதீர ஒரு ஸதாசார்யரைப் பணிந்து வாழ்வோமென விரும்பி, *மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதமாட்டிய அடுதிறலயோத்தி யெம்மரசாயும் *கோவலனாய் வெண்ணெயுண்ட வாயனாயுமுள்ள அழகிய மணவாளனை திருக்கோலத்தில் ஆசார்யத்வ பூர்த்தியுள்ள மணவாளமாமுனிகள் பக்கலிலே சிஷ்யவ்ருத்தியை வஹித்து க்ருதார்த்தனாய் அப்பரமாசார்யருடைய திருமேனியைக் கண்ணாரக்கண்டு களித்தவனாதலால் காரமர்மேனி யரங்கநகர்க்கிறை கண்கள் களித்திடு நாளாயிற்று அழகு திகழ்ந்திடுமைப்பசியில் திருமூலமதெனுநாள்.

ஆக இப்படிப்பட்ட பெருமைகள் வாய்ந்து பொலிந்ததாயிற்று—அந்தமில் சீர் மணவாளமுனிப்பரனவதாரஞ் செய்த நாளான ஐப்பசியில் திருமூலம். ... ... *

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்.

## நல்வார்த்தை நானூறு—மூன்றுவது சதகம்.

201. ஸ்வாமியெம்பெருமானுர்க்கு ராமாநுஜரென்னும் திருநாமம் எதனுல் இடப்பட்டதென்று ஆராயுமளவில், முன்னேர்களுடைய நூல்களிலிருந்து இங்ஙனே அறியலாகிறது:—ஸ்ரீராமாநுஜனென்னுஞ் சொல் ஸ்ரீராமபிரானுடைய தம்பி யென்னும் பொருள் கொண்டது. தசரதாத்மஜனுன இராமபிரானுக்கு இளேயோனுக அவதரித்த லக்ஷ்மணன் என்றபடி. அவன் இடைவீடின்றிக் கைங்கரியமே போதுபோக்காக இருந்ததுபோல் ஸ்வாமி உடையவரும் கைங்கரியத்தையே பெருஞ் செல்வமாகக் கொண்டிருக்கப் போகிருரென்பதை அவதார ஸமயத்திலே யோகதிருஷ்டியினு லறிந்தவரும் இவர்தமக்கு மாதுலருமான திருமலைநம்பியென்னுமாசிரியர் இவர்க்கு இராமாநுசனென்று நாமகரணஞ் செய்தருளினர்—என்பதாக.

202. ஸ்ரீராமபிரான் கைகேயியின் வரப்ப்ரார்த்தனையை நிறைவேற்றும் வியாஜமாகக் கானகஞ் செல்லப் புறப்படும்போது இளேயோனுன இலக்குமணன் தானும் நிர்ப்பந்தித்துத் தன்னையும் உடனழைத்துச் செல்லும்படி வேண்டினன். தானும் காட்டுக்கு வர விரும்பியது எதற்காகவென்னில்; *பாவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரி ஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதச் ச தே* என்பது அப்போது இவ்விளைய பெருமானுடைய வர்த்தையாக ஸ்ரீராமாயணத்தில் உலகறிய நிற்கும் ச்லோகம். "தேவரீர் பிராட்டியோடுகூட சித்திரகூடத்தாழ்வரை முதலானவிடங்களில் இன்புறும்போது அடியேன் ஒழிவில்காலமெல்லாமுடனுய்மன்னி வழுவிலாவடிமைகள் செய்யப்போகிறேன்" என்பது மேலே குறித்த ச்லோகத்தின் கருத்து. அப்படியே அவ்விளையோன் தன்னுடைய வாழ்நாள் முழுவதையும் அடிமையெனும் அத்தாணிச் சேவகஞ் செய்தே கழித்தனன். அதுபோலவே ஸ்வாமி உடையவரும் தம் வாழ்நாள் முழுவதையும் தொண்டுபூண்டமுதமுண்டே கழித்தருளினரென்பது அவரது திவ்விய சரிதையினுல் மிகப் பிரசித்திபெற்ற விஷயம். தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்ததும் மாறனுரைசெய்த தமிழ்மறை வளர்த்ததும் முதலானவை ஒப்புயர்வற்ற கைங்கரியங்களன்றே. ஆக இக்காரணம் பற்றியே ஸ்வாமிக்கு ராமாநுஜனென்னுந் திருநாமமிட்டதென்பது மிகப் பொருத்தம். லக்ஷ்மண முநி யென்றும் இளையாழ்வார் என்றும் வழங்குகின்ற இவரது திருநாமங்களும் இதனை வற்புறுத்தி நிற்கும்.

203. ராமாநுஜனென்ற திருநாமம் லக்ஷ்மணனுக்குப்போலவே கண்ணபிரானுக்கும் பொருந்தியதே. "பலராமனுடைய தம்பி" என்னும் காரணத்தினுல் கண்ணபிரானை ராமாநுஜனென்னக் குறையில்லையன்றே. ஆனதுபற்றியே முகுந்தமாலை யென்னும் உலகமறிந்த ஸ்தோத்திரத்தில் "ஹே ராமாநுஜ ஹே ஜகத்த்ரய குரோ! ஹே புண்டரீகாக்ஷ மாம் ஹே கோபீஜநநாத! பாலய" என்று ராமாநுஜனென்ற திருநாமத்தினுலேயே கண்ணபிரான் அழைக்கப்பட்டுள்ளான். ஆகவே கண்ணபிரானுடையதான அந்தத் திருநாமமே ஸ்வாமி உடையவர்க்குச் சாத்தப்பட்டதென்று கொள்ளுகிற ஸம்பிரதாயமும் ஒன்றுண்டு. ஸ்ரீநிகமாந்த தேசிகன் பணித்த யதிராஜ ஸப்ததியில் "சமிதோதய சங்கராதிகர்வ: ஸ்வபலாத் உத்த்ருத யாதவப்ரகாச:, அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய:" என்ற ச்லோகம் இதற்கு ஆதாரமாக அவதரித்ததாகும். [இந்த ச்லோகத்தின் விவரணம் பிறகு வரும்.]

204. கண்ணபிரானுக்கும் உடையவர்க்கும் பலபடிகளாலும் ஸாம்யமுண்டு. கண்ணபிரானாகத் தோன்றின பகவான் செய்த செயல்களும் ஸ்ரீராமாநுஜர் செய்தருளின செயல்களும் ஒத்திருக்கையாகிற ஒற்றுமைநயம் ஈண்டு நிரூபிக்கப்படுகிறது. மேலே யெடுத்துக்காட்டிய சமிதோதய சங்கராதிகர்வ: இத்யாதியான யதிராஜஸப்ததிச்லோக ரத்னத்தில் கண்ணனுக்கும் உடையவர்க்கும் ஸாம்யம் சிலேடையினால் நிர்வஹிக்கப் பட்டுள்ளது: அது வடமொழிக்கடலில் ஆழ்ந்தவர்கட்கே ரஸிக்கக்கூடியது. இங்கு நாம் நிரூபிக்கும் ஒற்றுமை சரித்திரப்போக்கில் ஸம்பந்தப்பட்டதாகும். கேண்மின்;—

205. கண்ணபிரான் திருவவதாரஞ் செய்த இடம் சிறைக்கூடம் என்பது உலக மறிந்தது. ஸ்ரீராமாநுஜர் அவதரித்த இடமும் சிறைக்கூடமே. எப்படியெனில்; *அமரரோடு உயர்விற் சென்று அறுவர்தம் பிறவி யஞ்சிறையே* [திருவாய்மொழி 1-3-11] என்ற நம்மாழ்வார் திருவாக்கின்படி இந்த ஸம்ஸார மண்டலமே ஒரு சிறைக்கூடமன்றோ- இஃது *இருள்தருமா ஞாலமாதலால் இருள் மலிந்த விடத்தே வந்து பிறந்தார் ஆசாரியர். கண்ணனும் *இருள் நாள் பிறந்த வம்மான்* என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தின்படியும் *வேண்டித் தேவரிரக்க—வீங்கிருள்வாய் வந்து பிறந்ததும* என்ற நம்மாழ்வார் பாசுரத்தின் படியும் இருள்மலிந்த போழ்தன்றோ பிறந்தது.

206. கண்ணபிரான் அவதரித்தபோது *ஜாதோஸி தேவதேவேச! சங்கசக்ரகதாதர!* என்கிறபடியே சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையனாகவே சுடர்விளக்கத்தோடு திருவவதரித்தான். ஆசாரியர் அவதரிக்கும்போதும் நம்போலியரைப்போலே அழுதல் அரற்றுதல் செய்யாதே மிக்க ஞான வெள்ளச்சுடர் விளக்கத்தையே காட்டிக்கொண்டு அனைவரும் வியப்புறுமாறு அவதரித்தார்.

207. கண்ணபிரான் பிறந்தவிடம் ஒன்று; இளமையில் வளர்ந்தவிடம் வேறொன்று; பிறகு வளர்ந்தவிடம் மற்றொன்று; (அதாவது) வடமதுரையிலே பிறந்தது; திருவாய்ப்பாடியிலே இளமையில் வளர்ந்தது; பிறகு முதுமையில் த்வாரகை முதலான விடங்களில் வளர்ந்தது. ஆசாரியரும் பிறந்தது ஸ்ரீபெரும்பூதூரில்: இளமையில் வளர்ந்தது காஞ்சீபுரியில்; பிறகு வளர்ந்தது ஸ்ரீரங்கம், திருநாராயணபுரம் முதலான விடங்களில். [மற்றொரு வகையுமுண்டு;] "திருமந்திரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து" என்கிற நம் முன்னோர்களின் முதுமொழியின்படியே திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தினால் ஸ்வரூபவுணர்ச்சி பெறுதலாகிற பிறவியைப்பெற்று, த்வயம் என்கிற மந்த்ரத்தின் அநுஸந்தானத்தையும் அதன்படி அனுட்டானத்தையுமே செல்வவாழ்ச்சியாகக் கொண்டிருப்பவரென்க. பிறக்குமிடம் திருமந்த்ரம்; வளருமிடம் த்வயம்—ஆகையாலே இதனால் கண்ணனோடு ஒப்புமை.

208. கண்ணபிரான் பிறந்த வயிற்றில் இவனொருவனே பிறக்கவில்லை; * மக்களறுவரைக் கல்லிடை மோத இழந்தவள் தன் வயிற்றில், சிக்கென வந்து பிறந்து நின்றாய் * [பெரியாழ்வார் திருமொழி 5-3-1.] என்கிறபடியே மற்றும் பல மக்கள் பிறந்தாருண்டு; ஆனால் அந்தப் பிள்ளைகளினால் உலகுக்கு யாதோருதவியும் நேர்ந்ததில்லை; அவர்கள் பிறந்ததும் இறந்ததுமே தெரியவருகின்றது. இதுபோல, ஆசாரியர் திருவவதரித்த இவ்வுலகத்தில் மற்றும் பல பேர்களும் ஒக்கப்பிறக்கின்றார்களெனினும் அவர்களால் உலகுக்கொரு நன்மையுமில்லையாயிற்று. அவர்களின் பிறப்பும் இறப்புமேதான் உலகுக்குத் தெரியும்.

209. கண்ணபிரான் வடமதுரையில் நின்றும் திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளும் போது "வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ" என்னும்படி பேராழமான பெருவெள்ளமும் முழந்தாளளவாக வற்றிப்போயிற்றென்று தெரியவருகிறது. அதுபோல, ஆசாரியர் சிறிது ஸஞ்சரிக்கத் தொடங்கும்போதே "பிறவியென்னும் கடலும் வற்றிப் பெருமபதமாகின்றதால்" என்ற பெரியாழ்வார் திருவாக்கின்படியே ஸம்ஸாரமாகிற பெருங் கடலும் வற்றத் தொடங்கிற்றென்க.

210. பராத்பரனான பெருமான் தனது பெருமைகளையெல்லாம் மறைத்து அடக்கிக் கொண்டு நீறுபூத்த நெருப்புப்போலேயாகி இடக்கை வலக்கை யறியாத ஆயர்களோடே கலந்து பழகினன்: அதுபோல ஆசாரியரும் மிகுஞானச் சிறு குழவியாய்த் தமது ஞான சக்திப் பெருமைகளையெல்லாம் மறைத்துக்கொண்டு அறிவிலா மனிசரோடே கலந்து பழகியிருந்தனர். கண்ணன் இடையர்களோடு மாத்திரம் கலந்து பழகியிருந்தானல்லன்; தன்னை வதைக்க வழிபார்த்திருந்த ஆஸுரப்ரக்ருதிகளோடும் கலந்திருந்து காலங் கழித்தனன். ஆசாரியரும் தம்மை மாய்க்கவெண்ணின யாதவப்ரகாசர்போல்வாரிடத்திலும் கலந்திருந்து காலங்கழித்ததுண்டே.

211 வளர்ந்தருளுமிடத்தில் தீயபுந்திக் கஞ்சனால் ஏவப்பட்ட பூதனை தாய்வேஷம் பூண்டுவந்து நஞ்சு தீற்றிய முலையை உண்ணக் கொடுத்துக் கண்ணனைக் கொல்ல முயன்று தானே முடிந்துபோனாள். இந்தப் பூதனையின் வரலாற்றைப் பேசுகின்ற தேசிகர் யாதவாப்யுதயத்தில் *கம்ஸப்ரயுக்தா கில காபி மாயா* என்று மாயை யென்கிற சொல்லால் கூறினர். மாயை யென்று மூலப்ரக்ருதிக்குப் பெயர். அது உண்மையில் விஷம் போன்றதாயிருக்கச் செய்தேயும் தன்னிடத்தில் போக்யதா புத்தியை யுண்டுபண்ணிக்கொண்டு தன் பக்கலிலே யீடுபடுத்தி நம்போல்வாரை முடிக்கப் பார்க்கிறது. இப்படியே ஆசாரியரையும் முடிக்கப் பார்க்கையில் அவரை முடிக்கமாட்டாமல் அவரது அளவற்ற பெருமையினால் தானே முடிந்து நின்றது. இவ்விஷயம் சரணாகதிகத்யத்தில் "ஸ்வவிஷயாயாச்ச போக்யபுத்தேர் ஜநநீம் தைவீம் குணமயீம் மாயாம்...." இத்யாதியால் விசதம்.

212. *கள்ளச் சகடங் கலக்கழியக் காலோச்சி* [திருப்பாவை—6] என்றபடி அஸுராவேசம் பெற்றவொரு சகடத்தைக் கண்ணன் திருவடிஸ்பர்சத்தால் நொறுக்கி முறித்து முடித்தனன் என்பது ப்ரஸித்தம். ஆசாரியரும் தமது திருவடி ஸ்பர்சத்தினால் சகடபங்கஞ் செய்தவரே; (எப்படியென்னில்) ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கொண்டு போகும் ஸாதனம் சகடமெனப்படுவது. இங்கிருந்து நாம் அப்பால் செல்லப் பலவழிகளுண்டு. நரகம் சுவர்க்கம் முதலானவற்றின் வழிகளிற் கொண்டு செல்லுவது கள்ளச் சகடமாகும்; ஆசாரியருடைய திருவடி ஸம்பந்தத்தினால் அது தொலைந் தொழிந்ததேயாம்; அர்ச்சிராதி மார்க்கமாகிய நல்வழியிற் செல்லும் ஸாதனமே மேம்பட்டுத் தீயவழிகளிற் செல்லும் ஸாதனம் சிதைந்தொழிந்ததென்க.

213. கயிற்றினால் கட்டி ஒருரலிலே பிணித்துவிடப்பெற்ற கண்ணன் அவ்வுரலையுமிழுத்துக்கொண்டு தவழ்ந்து இரட்டை மருத மரங்களின் நடுவே யெழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அந்த இரட்டை மரங்களிரண்டும் முறிந்து விழுந்தனவாக யமளார்ஜுன பங்க விருத்தாந்தமுள்ளது. இணைபிரியாதே நின்ற

இரட்டை மருத மரங்கள்போல இணைபிரியாது நின்று நம்மை நலியுமவை பலவுண்டு. பகவத் கீதையில் நான்காவது அத்யாயத்தில் *த்வந்த்வாதீதோ விமத்ஸர:* என்றும் ஏழாவது அத்யாயத்தில் *த்வந்த்வமோஹேந பாரத* என்றும், பதினைந்தாமத்யாயத்தில் *த்வந்த்வைர் விமுக்த்தாஸ் ஸுகது:க்கஸம்ஜ்ஞை:* என்றும் இப்படி பலவிடங்களில் த்வந்த்வம் (இரட்டை) என்று பல சொல்லப்பட்டுள்ளன; இன்பு துன்பு, அஹங்கார மமகாரம், புண்ணிய பாபம்,காமக்ரோதம் என்னுமிவையெல்லாம் இரட்டைகளாம். இவையெல்லாம் ஆசாரியர் திருவடி ஸம்பந்தம் பெற்றவளவிலே இற்றொழிந்தனவென்க.

214. *வையமேழுங் கண்டாள் பிள்ளை வாயுளே* என்றும் *வாயுள் வையகங்கண்ட மடநல்லார்* என்றும் சொல்லுகிறபடியே கண்ணபிரான் தனது திருவாயில் ஏழுலகங்களையும் அன்பர்களுக்குக் காட்டினன். அதுபோல ஆசாரியரும் 1. ச்ருதிகள், 2. ஸ்மிருதிகள், 3. இதிஹாஸங்கள், 4. புராணங்கள், 5. பாஞ்சராத்ரங்கள், 6. ஆழ்வாருளிச் செயல்கள், 7. ஆசார்ய திவ்யஸூக்திகள் ஆகிய ஏழையும் தமது திருவாக்கில் அன்பர்கட்குக் காட்டினர்.

215. யமுனையாற்றில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்நியினுல் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் தொலைப்படக்கினன். இவ்வரலாற்றை யாதவாப்யுதய காவியத்தில் தேசிகர் கூறுமிடத்து (4–125) ஸ்ரீராமாநுஜர் செய்தருளின செயலையே உவமையாகக் காட்டியருளினர். ஐந்தலைவாய் நாகமாகிய காளியன் யமுனையாற்றைக் கலக்கிக்கெடுத்தது—விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம் போனபடியெல்லாம் கூறும் தவறுன பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி யமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்தது—ஆசாரியர் தவறுன பொருள்களை நீக்கி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக ஆக்கினபடியாம். யமுனையின் ஸ்தானத்தில் வேதம்; காளியன் ஸ்தானத்தில் குதர்க்கவாதிகள்; கண்ணன் ஸ்தானத்தில் ஆசாரியர். *தூயபெரு நீர் யமுனைத் துறைவனை* என்னும்படி யமுனையாறு இடையறாத பகவத் ஸம்பந்தத்தை யுடையதாயிருந்ததுபோல வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடைத்தாயிருக்கும்.

216. காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை யுமிழ்ந்து நாசம் விளைவித்ததுபோல புறமதத்தவர்கள், ஐந்துவிதமான துர்வாதங்களாலே நாசத்தை விளைவிக்கின்றனர்; (எப்படியென்னில்) 1 ஈச்வரனே யில்லையென்னுதல், 2 ஈச்வரன் உண்டெனினும் அவன் அனுமானத்தால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்திரத்தால் ஸித்திப்பவனல்லன் என்னுதல், 3 சாஸ்திரங்களைக்கொண்டே ஈச்வரனை அங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் இல்லையென்னுதல், 4 ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை, பல ஈச்வரர்கள் உண்டென்னுதல், 5 பிரபஞ்சமேயில்லை—ஸர்வம் சூன்யம் எனல். ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்தங்களினுல் புறமதத்தவர்கள் வேதங்களைக்கெடுக்க, அந்தக் கெடுதல்களை ஆசாரியர் போக்கியருளினர். காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப் போலவே *நாவலிட்டுழி தருகின்றோம் நமன் தமர் தலைகண்மீதே* (திருமாலை—1) என்ற கணக்கிலே கூத்தாடப் பெறுதலுங் காண்க.

217. குதிரை வடிவங்கொண்டு மஹா பயங்கரனாகவந்த கேசி யென்னு மஸுரனைக் கண்ணபிரான் தொலைத்தருளினன்; அதுபோல நம் பேராசிரியர் * இந்த்ரியாணி ஹயா

காஹா: * என்ற உபநிஷத்தின்படியே குதிரைகளாகச் சொல்லப்பட்ட இந்திரியங்களின் வலியையடக்கி ஜிதேந்த்ரியராய் * காமாதிதோஷஹரம் ஆத்மபதாச்ரிதாநாம் * என்றும்* மதந கதனைர் நக்லிச்யந்தே யதீச்வரஸம்ச்ரயா: * என்றும் சொல்லும்படி வாழ்ந்தவர்.

218. கம்ஸனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஓரசுரன் விளாமரத்தின் வடிவமாய், தன் கீழே கண்ணன் வரும்போது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்து நிற்கவும், மற்றோ ரசுரன் கண்ணனை முட்டிக் கொல்லும்பொருட்டுக் கன்றின் வடிவங்கொண்டு நிற்கவும் இவற்றையறிந்த கண்ணபிரான் "விளவின் காய் கன்றினால் வீழ்த்தவனே" "கன்று கொண்டு விளங்கனி யெறிந்து" என்கிறபடியே கன்றைச் சுழற்றி விளவின்மீதெறிந்து இரண்டையும் ஒருசேர முடித்தருளினன் என்றவரலாறு முள்ளைக்கொண்டே முள்ளைக் களைகின்றபடியைக் காட்டுகின்றது, இதுபோலவே ஸ்வாமி ஸ்ரீ பாஷ்யகாரர் புறமதங்களைக் கண்டிக்குமிடத்து அவை பரஸ்பரவ்யாஹதங்களாயிருக்கும்படியை நன்கு நிரூபித்துக்காட்டி அவைகளைக் கொண்டே அவற்றை மறுத்தொழிப்பவர்.

219. இடையர்கள் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜை செய்யப் பற்பல வண்டி களில் சோறும், தயிரும், நெய்யும், காய்கறிகளும் சேகரிப்பதைக் கண்டு கண்ணன் அப் பூசனையனைத்தையும் கோவர்த்தன மலைக்கே இடும்படி கட்டளையிட்டுத் தானே ஒரு தேவதா ரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுது செய்தருள, இந்திரன் பசிக்கோபத்தினால் மேகங் களை ஏவிக் கடூரமான கல்மழையை ஏழு நாள் பெய்விக்க, அதனால் யார்க்கும் யாதொரு தீங்கும் நேரிடாதபடி கண்ணன் அம்மலையையே குடையாக வெடுத்துப்பிடித்து நின்றனன் என்பது ப்ரஸித்தமான கதை. தேவதாந்தரத்திற்கு வழிபாடு செய்வதைப் பொறாத தன்மை யும் அந்த வழிபாடுகளையெல்லாம் தானே யேற்றுக்கொள்ளுந்தன்மையும், அதனால் எதிரி என்ன தீங்கு செய்ய நினைத்தாலும் அதற்குப் பிரதியாகத் தீங்கிழைக்க நினையாத பெருந்தக வும், தன்னையடுத்தவர்களைத் தான் ரக்ஷித்துக்கொண்டு நிற்றலுமாகிய விஷயங்கள் இவ்விதி ஹாஸத்தில் கிடைக்கின்றன. * மறந்தும் புறந்தொழாமாந்தர் * என்றிருக்குமாசிரியர் தேவதாந்தர பஜனத்தைச் சிறிதும் ஸஹியார். "திருவில்லாத்தேவரைத்தேறேல்மின் தேவு" என்று துணிந்து உபதேசிப்பர். * ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா * என்றும் * பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகிவந்து * என்றுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமானே ஆசாரியனாக வந்து பிறந்ததனால் ஆராதனைகளெல்லாம் ஆசார்யனுக்கே சேரும். "குற்றஞ் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும்" [ஸ்ரீவசனபூஷணம் 365] என்றிருப்பவர் ஆசார்யராகையாலே தீங்கிழைப்பார் திறத்திலும் பிரதியாகத் தீங்கிழைக்க நினையார். பெருமழையில் நின்றும் கண்ணன் காத்தருளினதுபோல * அவிவேக கநாந்த திங்முகே பஹுதா ஸந்ததது:க்கவர்ஷிணி—பவதுர்த்திநே* [ஸ்தோத்ரரத்நம்-49] என்னப்பட்ட பெருமழையில் நின்றும் (அதாவது, ஸம்ஸாரத் துயர்ப் பெருமழையினின் றும்) காத்தருளினார். கண்ணன் ஏழு நாள் காத்தனன். ஆசிரியர் காப்பது ஏழேழ் பிறவிக்கும்.

220. கண்ணன் நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக, அவளது தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளை வலியடக்கி அப்பிராட்டியை மணஞ் செய்துகொண்டனன். நம் பரமாசார்யர் "எட்டிழை

சென்னை மாம்பலம் ஸ்ரீசங்கரமடத்தில்
**P. B. A. ஸ்வாமிகளின் (வேதஸாரம்) உபந்யாஸ கோஷ்டி 28-7-63.**



யாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம் போலே திருமந்த்ரம்'' [முமுக்ஷுப்படி 113] என்கிறபடியே திருமந்த்ரமாகிற திருமங்கலியத்தை சேதநர்களுக்குக் கட்டி விவாஹம் நடத்துகைக்கு அங்கமாக, காமம், குரோதம், லோபம், மோஹம், மதம் மாத்ஸர்யம் அஸூயை என்கிற ஏழு விரோதிகளையும் தொலைத்தருளினர்.

221. கண்ணன் இரண்டு மல்லர்களை மடித்ததுபோல ஆசிரியர் *நீர்நுபதென்றிவை வேர்முதல் மாய்த்து* என்கிறபடியே அஹங்கார மமகாரங்களை யடியறுத்தவர்.

222. கண்ணன் குவலயா பீடமென்கிற மதயானையை முடித்தாப்போலே "மதக்களிறைந்தினையும் சேரி திரியாமல் செந்நிறீஇ" என்கிற பொய்கையார் பாசுரத்தின்படியே மதகளிறாகிய இந்திரியத்தின் துஷ்டத்தன்மையைத் தொலைத்தவர்.

223. கண்ணன் மாலாகாரர் திருமாளிகைக் கெழுந்தருளி அவர் தந்த பூவைப் பெற்று உகந்ததுபோல நம் ஆசிரியர் *அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ:, ஸர்வ பூததயா புஷ்பம் க்ஷமாபுஷ்பம் விசேஷத:, ஜ்ஞாநம் புஷ்பம் தப:புஷ்பம் த்யாநம் புஷ்பம் ததைவ ச, ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத்* என்னப்பட்ட எண்வகைப் பூவையும் சிஷ்யர்கள் பக்கலிலே செழித்து வளரக் காணப்பெற்றுக் களித்தமையறிக.

224. கண்ணபிரான் கம்ஸ சிசுபால கௌரவ ப்ரப்ருதிகளை முடித்துப் பஞ்ச பாண்டவாதிகளை வாழ்வித்ததுபோல நம் பரமாசார்யர் *தர்க்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும், நான்மறையும் நிற்கக் குறும்பு செய்நீசரும் மாண்டனரென்னும்படியாக *நாட்டிய நீசச் சமயங்களை மாள்வித்து அர்த்த பஞ்சகம் முதலிய விசேஷார்த்தங்களை எங்கும் விளங்கச் செய்தனர்.

225. கண்ணபிரான் ஸாந்தீபநி புத்ராநயனம், [அதாவது, *மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தது], *பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும் இறைப்பொழுதில் கொணர்ந்து கொடுத்த

தாகிற வைதிக புத்ராநயனம், பாரத யுத்தத்தில் அச்வத்தாமாவின் அபாண்டவாஸ்த்ர ப்ரயோகத்தினால் கரிக்கட்டையாய்ப் போன உத்தரைதன் சிறுவனை உய்யக் கொண்டது இவை முதலான அதிமாநுஷக்ருத்யங்கள் பலவும் செய்தது போல, ஸ்வாமி ராமாநுஜரும் *அப்பனுக்குச் சங்காழி யளித்தருளினது, ஓரிரவில் விந்த்யாடவியினின்று ஸத்ய வ்ரத க்ஷேத்திரம் வந்து சேர்ந்தது முதலான பலபல அதிமாநுஷ க்ருத்யங்களைச் செய்தருளினர். இங்ஙனே மற்றும் பலவுங்காண்க.

226. ஸ்ரீமந்நிகமாந்த வாசிரியர் பணித்த யதிராஜஸப்ததியில் முதல் ஒன்பது ச்லோகங்கள் குருபரம்பராநுபவத்தில் சென்றன. 1. பெரிய பெருமாள், 2. பெரிய பிராட்டியார். 3. ஸேனை முதலியார். 4. நம்மாழ்வார். 5. ஸ்ரீமந்நாதமுனிகள். 6. உய்யக் கொண்டார். 7. மணக்கால் நம்பி. 8. ஆளவந்தார். 9. பெரியநம்பி. ஆக இப்படி குரு பரம்பராஸ்துதிசெய்து கலைக்கட்டியபின் *ப்ரஜ்ஞைம் லக்ஷ்மணமுநி:* என்கிற ச்லோகம் முதலாக எம்பெருமானாருடைய குணாநுபவத்திலே இறங்கியுள்ளார். மேற்குறித்த ஆரம்ப ச்லோகத்தில் லக்ஷ்மணமுநி: என்று ஸ்வாமியின் திருநாமத்தை வ்யபதேசித்தபடியினால், ஸ்வாமிக்கு அமைந்த ராமாநுஜர் என்னுந் திருநாமம் தசரதாத்மஜனை ஸ்ரீராமனுடைய தம்பியாகிய இளைய பெருமாளைக் குறிக்கொண்டதாமென்று விளக்கப்பட்டதாயிற்று. ராமாநுஜனென்கிற திருநாமம் "செம்பொற்கழலடிச் செல்வாபலதேவா!" என்னப்பட்ட நம்பிமூத்த பிரானென்னும் பலராமனுடைய தம்பியான கண்ணனையும் சொல்லக்கடவதென்று கொண்டு கண்ணனுக்கும் ஸ்ரீராமாநுஜர்க்குமுள்ள ஒற்றுமையை விவரித்து நிரூபித்திருக்கின்றோம். அது சரித்திரப்போக்கில் உள்ளுறை பொருள்வகை யென்கிற ஸ்வாபதேசார்த்த முறையில் நிரூபிக்கப்பட்ட ஸாம்யம். வேதாந்த வாசிரியர் யதிராஜ ஸப்ததியில் சப்தச்லேஷ வகையினால் நிரூபித்தருளின ஸாம்யம் ஆலங்காரிகர்களுக்குப் பரமபோக்யமாயிருக்கும்.

227. "சமிதோதய சங்கராதி கர்வ: ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச:, அவரோபித வாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய:" என்னுமிந்த ச்லோகத்தில் மூன்று வகைகளினால் கண்ணபிரானுக்கும் எம்பெருமானாருக்கும் ஸாம்யம் வடமொழி வல்லுநர்க்கு மிகவும் ரஸிக்கக்கூடிய ச்லேஷாலங்கார மரியாதையினால் அருளிச்செய்யப்பட்டுள்ளது. பல பொருள் படச் சொல்லுவது ச்லேஷம் [சிலேடை] எனப்படும். அது அபங்கச்லேஷமென்றும் ஸபங்க ச்லேஷமென்றும் இருவகைப்படும். பதங்களை யொடித்துப் பொருள் கொள்ள வேண்டாமல் நாநார்த்த பதங்களையிட்டுப் பல பொருள்களைப் பெறுவிப்பதானது அபங்கச்லேஷமெனப்படும். அப்படியல்லாமல் பதங்களை யொடித்துப் பல பொருள் கொள்ளுமாறு பிரயோகஞ் செய்வதானது ஸபங்கச்லேஷ மெனப்படும். மேலே உதாஹரித்த *சமிதோதய* என்னும் யதிராஜ ஸப்ததிச்லோக ரத்நத்தில் முதலிரண்டு பாதங்களில் அபங்கச்லேஷம்; மூன்றுவது பாதத்தில் மாத்திரம் ஸபங்கச்லேஷம்.

228. [சமிதோதய சங்கராதி கர்வ:] இது கண்ணனுக்கும் உடையவர்க்கும் பொதுவான விசேஷணம். சங்கரன் முதலானாருடைய செருக்கையடக்கினவர் என்பது பொருள். கண்ணபிரான்பரமாகப் பொருள் கொள்ளும்போது சங்கரன் என்பதற்குச் சிவபிரானென்று அர்த்தம். ஆதிபதத்தினால் அப்பிரானைச் சேர்ந்த கார்த்திகையான் கரிமுகத்தான் முதலானாரை [ஸுப்ரஹ்மண்ய விநாயகாதிகளை]க்கொள்வது. கண்ணபிரான் பாணாஸுர யுத்தத்தில்

சங்கரன் முதலானாருடைய செருக்கை யடக்கினது இதிஹாஸ புராணப்ரஸித்தம். உடையவர் *சங்கர பாக்கர யாதவபாட்ட ப்ரபாகரர் தங்கள் மதஞ் சாய்வுற* என்றும் *கா சங்கா சங்கராதே:* என்றும் சொல்லுகிறபடியே சங்கரகுருப்ரப்ருதிகளான புறமதத்தவர்களின் செருக்கைப் போக்கினவர் என்பது சரித்திரப்ரஸித்தம். ஆகவே இந்த விசேஷணம் கண்ணனுக்கும் உடையவர்க்கும் ஸாம்யத்தை நிரூபித்ததாயிற்று.

229. கண்ணபிரான் சங்கராதிகளின் செருக்கையடக்கின வரலாறு;—பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்த பாணாஸுரனென்பான் ஒருகால் நடராஜனான சிவபெருமானுடைய நடனத்திற்குப் பொருத்தமாகத் தாளம் போட்டனன்; அதனால் மிக்க மகிழ்ச்சிகொண்ட சிவபெருமான் அந்த ஸந்தோஷாதி சயத்தினால் அந்த பாணாஸுரனுக்கு ஆயிரம் கைகளை வரப்பிரசாதமாகத் தந்து, தானும் தன் பரிவாரங்களும் அவனது பட்டணத்தைக் காவல் செய்து கொண்டிருக்கும் படியான அநுக்ரஹமுஞ் செய்தருளினான். அந்த பாணாஸுரனுக்கு உஷையென்று ஒரு மகளிருந்தாள். அவள் ஒரு நாள் ஒரு பரமஸுந்தரனான புருஷனோடு தான் கூடியிருந்ததாகக் கனாக் கண்டு தன் உயிர்த்தோழியான சித்ரலேகைக்கு அச் செய்தியைத் தெரிவித்தாள். அவள் உலகிலுள்ள பல ஸுந்தர புருஷர்களின் வடிவங்களைச் சித்திரத்தில் எழுதிக்காட்ட, கிருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனே தன்னோடு கூடி யிருந்தவனாக உஷை சுட்டிக்காட்டி அவனைப் பெறுவதற்கு உபாயஞ் செய்யவேண்டுமென்று அத்தோழியை வேண்டினாள். அவள் தன் யோகவித்தை மஹிமையினால் த்வாரகைக்குச்சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை யநுபவித்து வந்தாள். இச்செய்தியைக் காவலாளரால‌றிந்த அந்த பாணாசுரன் தன்சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினால் பொருது நாகாஸ்திரத்தினால் கட்டிப்போட்டிருந்தான். த்வாரகையிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது, நாரத முனிவனால் செய்தியுணரப்பெற்ற ஸ்ரீ கிருஷ்ணபகவான் கருடாரூடனாய் பலராமன் முதலானாரோடு கூட பாணபுரமாகிய சோணிதபுரத்திற் கெழுந்தருளும்போதே அங்கு அருகில் காவல் காத்துக்கொண்டிருந்த சிவபிரானது பிரமத கணங்கள் எதிர்த்துவர, அவர்களை யெல்லாமழித்து பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும் பொருட்டுப் போர்புரிய, அதனையுந்துரத்தி, பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த சிவபிரானது அநுசரர்களான அக்நிதேவர்கள் ஐவரையும் நாசஞ்செய்து, பாணாசுரனோடு போர்செய்யத் தொடங்குகையில், அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப்போராட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தைப் பிரயோகித்துச் சிவன் ஒன்றுஞ் செய்யமாட்டாமல் கொட்டாவி 'விட்டுக்கொண்டு சோர்வடைந்து போம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் உங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர் சக்ராயுதத்தை யெடுத்துப் பிரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரை தாரையாய் உதிர மொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாக விருக்கையில், பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் சிவபஜனஞ் செய்தார்க்குப் பலன் கைமேலே கண்டதாக இருக்கட்டுமென்றெண்ணிய கண்ணபிரான் நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளினன் - என்பதாம்.

230. எம்பெருமானுர் சங்கராதி கர்வசமநம் பண்ணினது ஸ்ரீ பாஷ்யாதிக்ரந்த ரசனையினுலும் அத்வைதிப்ரப்ருதிகளை வாதப்போரில் வென்று ஆட்படுத்திக்கொண்டதனுலு மென்றுணர்க. இவ்விஷயம் மேலே மூன்ருவது பாதத்தின் விவரணத்திலும் விளங்கும்.

231. [2. ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச:] கண்ணபிரான்பரமான அர்த்தத்தில்-யாதவர்களின் பிரகாசம் யயாதி சாபத்தினுல் மங்கிக் கிடக்கையில் "கோபாலோ யாதவம் வம்சம் மக்நமப்யுத்தரிஷ்யதி" என்கிறபடியே அந்தப்ரகாசத்தைத் தனது வலிமையினுல் புநருத்தாரம் செய்தவன் என்று கொள்ளக்கடவது. யதுகுலத்திலே பிறந்து யாதவர்களை விளக்கமுறச் செய்தருளினவன் கண்ணபிரான் என்க. உடையவர்பரமான அர்த்தத்தில் 'யாதவப்ரகாச' என்பதை முழுச்சொல்லாகக்கொண்டு, அப்பெயர்பூண்ட மாயாவாதி குருவைத் தம்முடைய க்ருபாபலத்தினுல் உத்தரிப்பித்தவர் என்று கொள்க. முதலில் தமக்கு உபாத்யாயராயிருந்த யாதவ ப்ரகாசரையும் தமக்கு அடிமைப்படுத்திக் கொள்ளும்படியான ப்ரபாவமுடையவர் எம்பெருமானுர் என்க. இவ்வரலாறு உடையவர் சரிதையில் விரிவாகக் காணத்தக்கது.

232. [3. அவரோபிதவாந் ச்ருதே: அபார்த்தாந்] "அபார்த்தாந் ச்ருதே: அவரோபிதவாந்" என்று அந்வயம். இதில் ஸபங்கச்லேஷமுள்ளது. அபார்த்தாந் என்னும் பதம், அ-பார்த்தாந்) என்றும் (அப-அர்த்தாந்) என்றும் பிரியும். பார்த்தனென்று அர்ஜுநனைச் சொல்லி, பார்த்தனல்லாத [அர்ஜுந விரோதிகளான] துர்யோதநாதிகளை அபார்த்தர்களென்று சொல்லுமதாகக் கண்ணன்பரமான அர்த்தத்தில் கொள்ளவேண்டும். ச்ருதியென்று கீர்த்திக்கும் பெயர், வேதத்திற்கும் பெயர். கண்ணபிரான் அபார்த்தர்களான துர்யோதநாதிகளைக் கீர்த்தியிலிருந்து கீழே யிறக்கிவிட்டான்; பாண்டவ பக்ஷபாதியாயிருந்து * மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியச்செய்து அவர்களைக் கீர்த்தியிழந்தவர்களாகச் செய்தானென்றபடி. ஸ்வாமி ராமாநுஜரோ வென்னில்; [ச்ருதே:அபார்த்தாந் அவரோபிதவாந்] இதர மதஸ்தர்கள் வேதங்களுக்குச் செய்த அபார்த்தங்களை ஸமீசீநார்த்த ப்ரதர்சநத்தினுல் நிரஸித்தருளினவர்: ஆனதுபற்றியே சமிதோதய சங்கராதி கர்வராக முதல் பாதத்தில் கூறப்பட்டாரென்றுணர்க.

233. "சமிதோதயஶங்கராதிகர்வ:" என்பதில் இரண்டு பஹுவ்ரீஹிஸமாஸங்களிருப்பதாகக் கொண்டு ஒரு நிர்வாஹமும், ஒரு பஹுவ்ரீஹியே யிருப்பதாக வைத்து மற்றொரு நிர்வாஹமும் ஆக இருவகையான நிர்வாஹமுண்டு. முதல் நிர்வாஹத்தில் "ஶமித: உதய: யஸ்ய ஸ:—ஶமிதோதய:; ஶங்கராதீநாம் கர்வ:—ஶங்கராதிகர்வ:. ஶமிதோதய: ஶங்கராதிகர்வ: யேந ஸ:." என்று விக்ரஹம் கொண்டு ஶங்கராதிகளுடைய கர்வோதயத்தை ஶமநம் பண்ணினவர் ஸ்வாமி யெம்பெருமானுர் என்று பொருள் காணப்படுகையாலே இரண்டு பஹுவ்ரீஹிகளைக் கொண்ட நிர்வாஹமாகிறது. இப்போது (உதய) என்பதற்கு உற்பத்தியென்று பொருள் தேறுகிறது. கர்வத்தினுடைய உத்பத்தியென்றதாகிறது. இனி, மற்றொரு நிர்வாஹமாவது, உதய என்கிற சொல் நியாயஶாஸ்த்ர ப்ரவர்த்தகரான உதயநாசார்யரைச் சொல்லிற்ருகி, (உதயஶ்ச ஶங்கரஶ்ச) என்று த்வந்த்வ ஸமாஸங்கொண்டு உதயநாசார்ய ஶங்கராசார்யாதிகளின் செருக்கை யடக்கினவர் என்றதாகக் கொண்டால் பஹுவ்ரீஹி ஒன்றேயொழிய இரண்டில்லை. இதில் அர்த்தமழகிது.

234. உலகில் தோன்றியுள்ள மதங்களுக்குக் கணக்கு வழக்கில்லை. திருவிருத்தத்தில் நம்மாழ்வார் "மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலபல வாக்கி" என்றருளிச் செய்தபடி எண்ணிறந்த மதங்களன்றோவுள்ளன. ஒவ்வொரு மதஸ்தரும் தம் தம் மதத்தையே சிறந்ததாகக் கொள்வதும், மதாந்தரங்களை ஹேயமாக நினைப்பதுமுண்டு, மதாபிமானம் என்பது தனிப்பட்டதாதலால் அதை நாம் மறுத்துப்பயனில்லை. இதரமதஸ்தர்கள் கேள்வி கேட்டால் நின்று விடை கூறவல்ல பண்டிதர்கள் சில மதங்களில் கிடையாரென்பதைக் கண்டு வருகிறோம். அப்படிப்பட்ட மதங்களும் சிலரால் கொண்டாடப்பட்டு வருகின்றது. அவர்கள் ஒன்று பாடம் பண்ணியிருக்கிறார்கள். (அதாவது) "உதி தௌபல்யாக ந உதகெளபல்ய—மதி தௌர்பல்யாத் ந மத தௌர்பல்யம்" என்கிறார்கள். இந்த வாக்கியத்தின் பொருள் என்னவென்றால், உனக்கு விடையிறுத்து வெற்றிபெறும்படியான மதி விகாஸம் எனக்கு இல்லாமற் போனாலும் என்னுடைய மதம் துர்பலமாய் விடாது என்பதாம். என்னுடைய மதம் சிறந்ததென்பதை ஸமர்த்திக்கவல்ல பண்டிதர் என்றைக்காவது தோன்றுவர், எந்த நாட்டிலாவது எந்த மூலையிலாவது தோன்றியிருப்பர்; என்னுடைய மதி துர்பலமென்பதை நான் ஒப்புக் கொள்ளுவேனே யல்லது என்னுடைய மதம் துர்பலமென்பதை நான் ஒரு நாளும் ஒப்புக்கொள்ள மாட்டேனென்று பிடிவாதம் கொண்டிருப்பவர்கள் மலிந்துள்ளார்கள் இப்பூமண்டலத்தில்.

235. மற்ற மதங்களைப் பற்றி நமக்கென்ன விசாரம். நாம் எம்பெருமானார் தரிசனத்தில் ஜனித்து மணவாள மாமுனிகளை வாழ்த்துங்குடியிலே வளர்ந்து வருகிறோமென்பதை நினைக்குங்கால் "எனக்கார் நிகர் நீணிலத்தே" "இல்லையெனக் கெதிரில்லை யெனக்கெதிரில்லை யெனக்கெதிரே" என்று சொல்லி நாம் களித்துக் கூத்தாடக் குறையில்லை. ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் "ஜநித்வாஹம் வம்சே மஹதி ஜகதி க்க்யாத யசஸாம்" என்கிற சுலோகத்தில் தம்முடைய ஜன்மஸாக்யத்தைப் போரப் பொலியக் கொண்டாடிப் பேசி மகிழ்கிறான்றே. அவ்விதமாக நாமும் பேசிக் களிக்க என்ன குறை?

236. கம்பர் பெருமான் சடகோப ரந்தாதியில் "கூட்டங்கள் தோறும் குருகைப் பிரான் குணங்கூறுமன்பர் ஈட்டங்கள் தோறுமிருக்கப் பெற்றேம், இருந்தெம்முடைய நாட்டங்கள் தோறும் புனல் வந்து நாலப்பெற்றேம்" என்கிற செய்யுளினால் தாம் பெறும் பேறுபெற்றமையைக் கூறிக் கூத்தாடுகிறார். நம்மாழ்வாருடைய திருக் குணங்களைக் கூறுவார் திரளிலே தாம் கண்ணுங் கண்ணீருமாயிருக்கப் பெற்ற பேற்றின் கனத்தை உள் குழைந்து பேசியுள்ளார். இப்படி நாம் பேசிக் கொள்ள எத்தனையோ விஷயங்களிருக்கின்றன. "ஸர்வதேச உசாகாலேஷு அவ்யாஹத பராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம். ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதி வாஸரமுஜ்ஜ்வலா. திகந்த வ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோகஹிதைஷிணீ" என்னுமிவ்விரண்டு சுலோகங்களை நாம் திவ்ய தேசங்கள் தோறும் க்ருஹங்கள் தோறும் அநுதினமும் குழாங் கூடியநுஸந்திக்கும் பாக்கியம் பெற்றிருப்பதுண்டே, இதற்கு நிகரான பாக்கியம் வேறொன்று உலகிலுண்டோ? இதற்குக் கோரமாதவம் என்ன செய்திருப்போமோ!

[தொடரும்]



ஸ்ரீ:



ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீ காஞ்சீ நம்பிள்ளை மஹோத்ஸவ ப்ரகடன பத்திரிகை.

## (சோபக்ருத்ஸு 1963)

ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதியின் திருமுன்பே திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் நம்பிள்ளைக்கு நாளது கார்த்திகைமீ 5வ (21—11—63) வியாழக்கிழமை உத்தராட நக்ஷத்திரத்தில் திருவவதார மஹோத்ஸவம் தொடக்கமாகி கார்த்திகைமீ 14வ (30—11—63) சனிக்கிழமை திருக்கார்த்திகைத் திருநக்ஷத்திரத்தில் சாற்றுமுறையாகும். பத்து நாட்களிலும் அலங்கார திருமஞ்சனமும் இரண்டு வேளைகளிலும் திவ்யப்ரபந்த ஸேவை கோஷ்டிகளும் ததியாராதனமும் விசேஷ வைபவமாக நடைபெறும். வித்வான்களின் உபந்யாஸங்களும் இடையிடையே நடைபெறும். ஆஸ்திகர்களனைவரும் வந்திருந்து அநுபவித்து ஆனந்திக்கவேணும். இம்மஹோத்ஸவ ஸேவார்த்தமாக வெளியூர்களிலிருந்து வரும் பக்த பாகவதோத்தமர்களுக்கு ஸ்தல வசதி முதலிய ஸௌகரியங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படும். ஸ்ரீவைஷ்ணவ பக்த சிகாமணிகள் குழாங்கூடியிருந்து அநுபவிக்கக் கூடிய மஹோத்ஸவமிது.

இரண்டாயிரம் ரூபாய் செலவில் விசேஷ வைபவங்களுடன் நடைபெற்று வருகின்ற இந்த மஹோத்ஸவத்திற்கு பக்தர்கள் உகந்து உபகரிக்கும் பொருளே மூலதனமாகும். அவரவர்கள் யதாசக்தி பொருளுதவி புரிந்து ஆசார்ய ஸார்வபௌமருடைய இம் மஹோத்ஸவத்தை மிகவும் சிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

இங்ஙனம்
ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்,
**அண்ணங்கராசாரியர்,**
(நம்பிள்ளை ஸன்னிதி காவலாளர்)

5—11—63.



## சென்ற சுபகிருது வருஷத்தில் (1962) இம் மஹோத்ஸவத்தில் உபயம் நடத்தினவர்களின் விவரம்.

1. முதல் திருநாள் காலையும் மாலையும்—சென்னை உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் சாரிடி உபயம். (ததீயாராதனையு முட்பட.)

2. ஸ்ரீ. உ. வே. வி. வி. ஐயங்கார் ஸ்வாமி, கரியமாணிக்கம் இரண்டாவது திருநாள் காலை உபயம், ஸ்ரீமான் பக்தமணிகள். V. R. எதிராஜம் செட்டி V, C. சக்ரபாணி செட்டி & கொண்டலேடி கன்னைய நாயுடு, மதராஸ் இவர்கள் இரண்டாவது திருநாள் இரவு உபயக்காரர்கள்.

3. ஸ்ரீ. உ. வே. R. ஸ்ரீநிவாஸன், டாக்டர்—(குளித்தலை) மூன்ருவது திருநாள் காலை உபயம். ஸ்ரீ. உ. வே. நெல்லூர் சக்ரவர்த்தி வெங்கடாசாரியார் ஸ்வாமி நாறுநறும்பொழில் அக்கார வடிசில். ஸ்ரீ. உ, வே. R. வரதராஜய்யங்கார், Asoka Road, New Delhi மூன்ருவது திருநாள் இரவு உபயம்.

4. விக்ரவாண்டி பாகவதர். திருநாராயண ரெட்டியார், சிங்காரம் பிள்ளை வகையருக்கள் ததீயாராதனை யுட்பட நான்காவது திருநாள் காலையுபயம். ஆத்தூர், ஸ்ரீதரன் மோட்டார் ஸர்வீஸ் புரொப்ரைட்டர், ஸ்ரீவைஷ்ணவ ரத்னம். V. கேசவலு நாயுடு அவர்கள் நான்காவது திருநாள் இரவு உபயம்,

5. ஐந்தாவது திருநாள் காலையுபயம் ஸ்ரீ.உ.வே. R ராமஸ்வாமி ஐயங்கார், Committee Office' உரிகம் and A. ராமஸ்வாமி ஐயங்கார், உரிகம் (Son of Late Ramakrishna Iyengar). ஐந்தாவது திருநாள் இரவு உபயம்—காஞ்சீபுரம் பக்தமணி: கண்ணப்ப நாயகரவர்கள்.

6. ஸ்ரீ. உ. வே. C. R. ராமஸ்வாமி ஐயங்கார் (அட்வகேட்) கோயம்புத்தூர் ஆருவது திருநாள், காலை உபயம். ஸ்ரீ, உ. வே. விட்டலாபுரம் V. S. வெங்கடாசாரியார் ஸ்வாமி & K. V. R. S. ராமாநுஜா சாரியார் (ரமணக்க பேட்டா) ஆருவது திருநாள் இரவு உபயம்.

7. ஸ்ரீ. உ. வே. அகரம் கந்தாடை ரங்கஸ்வாமி ஐயங்கார் (Hardwar, T. Nagar) & அனக். காவூர் பண்டித கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஏழாவது திருநாள் காலையுபயம். ஸ்ரீ. உ. வே. (Late) தென் திருப்பேரை K. ராமசந்திரய்யங்கார் பண்டு மூலம் ஏழாவது திருநாள் இரவு வெள்ளைச்சுரிசங்கு கோஷ்டி படித்தனம். பெருங்குளம் மிராசுதார் ஸ்ரீ. உ. வே. மாயக்கூத்த ஐயங்கார் ஏழாவது திருநாள் இரவு உபயம்.

8. ஸ்ரீ. உ. வே. A. K. சடகோபாசாரியார் (பென்ஷனர் அம்பத்தூர்) எட்டாவது திருநாள் காலை உபயம். ஸ்ரீ. உ. வே. மங்களம்பாடி வித்வான், ஸ்ரீநிவாஸ ராமாநுஜாசாரியார் ஸ்வாமி திருக் குமாரர் ஜகன்னாதாசாரியார் எட்டாவது திருநாள் இரவு உப்யம்.

9. ஸ்ரீ. உ. வே. மங்களம், ராமாநுஜய்யங்கார் ஸ்வாமி சாரிடி பண்டு (மதரூஸ்) ஒன்பதாவது திருநாள் இரவு உபயம். கோனேரி குப்பம் ஸதீமணி மரகதம்மா, ஒன்பதாவது திருநாள் காலை உபயம். (ததீயாராதனை யுட்பட).

10. கீர்த்தி மூர்த்தியான ஊரா, ஸ்ரீராமுலு செட்டியார் சாரிடீஸ்—சாத்துமுறை இரவு உபயம். ஸ்ரீமதுபயவே. அந்தர்வேதிபாளயம் ஈயுண்ணி சேஷசிங்கராசாரியார் ஸ்வாமி, தென் திருப்பேரை மகர பூஷணமைய்யங்கார், ஸ்ரீமத்பரமஹம்ஸ காஞ்சீ அழகிய மணவாள யதீந்த்ரப்ரவணராமாநுஜ ஜீயர் ஸ்வாமி ஆகிய இத்திருநாமங்கள் சாற்றுமுறை காலை உபயம். ... ... ... (*)

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

## 16. "உமக்கு மட்டுமா? ஊருக்கெல்லாமல்லவா?"

ஊருக்கெல்லாம் தலைவராய் ஏகபுத்ரரான ஒரு பெரியவர் காலமாய் விட்டார். அவர்க்கு 16 வயதில் ஒரு குமாரன். அவனும் அவன் தாயாருமாகக் குடும்பம் நடத்தி வருகிறார்கள். இப்படியிருக்கையில் அவ்வூரில் ஒருவருடைய தாயார் பரமபதமடைந்தாள். உற்றாரும் உறவினருமான அவரவர்கள் சென்று உபசாரம் சொல்லிவிட்டு வருகிறார்கள். இந்த குமாரன் ஸங்கோசத்தினால் உபசாரம் சொல்லப் போகவில்லை. இவனுடைய தாயார் 'பையா! உன் தகப்பனார் ஊருக்கெல்லாம் பெரியவராயிருந்து எல்லாரோடும் ஒத்து வாழ்ந்து நல்ல பெயரெடுத்துப் போனார். நீயும் அப்படி நல்ல பேரெடுக்கவேணும். நாலு பேரோடு கூடப் போய் நீயும் உபசாரம் சொல்லிவிட்டு வா' என்றாள். அம்மா! எனக்கு உபசாரம் சொல்லுகிற வழி தெரியாதே; இதுவரை நான் எங்கும் போனதில்லையே; எப்படி உபசாரம் சொல்லுகிறதென்பதே தெரியாத நான் அங்கே போய் என்ன பண்ணுவது என்றான். அதற்குத் தாயார் 'அப்பா! நீ ஒன்றும் செய்ய வேண்டாம்; ஒன்றும் பேச வேண்டாம்; நாலு பேர் போகும் போது அவர்களோடு கூட நீயும் போய் நின்று கொண்டிரு. அவரவர்கள் சொல்லுவதை கவனித்துக் கொண்டிரு. உபசாரம் சொல்லுகிறவழி தனிச்சே தெரிகிறது' என்று சொல்லி, போகிறவர்களோடு கூட இவனையுமனுப்பினாள். இவனும் அவர்களோடு புறப்பட்டுப் போனான். போனவிடத்தில் மாத்ருவியோகத்தால் வருந்தியழுகிறவரைப் பார்த்து அவரவர்கள் 'உமக்கு மட்டுமா தாயாராக இருந்தாள்; ஊருக்கெல்லாமல்லவோ தாயாராக இருந்தாள்; அந்த அம்மா இன்னும் கொஞ்ச காலம் ஜீவித்திருந்தால் எங்களுக்கெல்லாம் எவ்வளவோ ஸௌகரியமாயிருக்கும்' என்று உபசாரம்சொன்னார்கள். இதைக்கேட்டுக்கொண்டிருந்த பிள்ளையாண்டான் 'உபசாரம் சொல்லுகிற வழி இதுதான் போலும்' என்று கெட்டியாக மனத்தில் கொண்டான். திரும்பி வந்து தன் தாயாரிடம் 'அம்மா! உபசாரம் சொல்லுகிறதென்றால் நான் என்னமோவென்று நினைத்திருந்தேன். ஒரே நிமிஷத்தில் தெரிந்துவிட்டதம்மா' என்று சொன்னான். அது கேட்டு உகந்த அம்மா 'பையா! இவ்வூரில் எல்லாரும் நமக்கு வேண்டியவர்கள்; யாருடைய க்ருஹத்தில் எது நேர்ந்தாலும் நான் ஊரில் இல்லாவிட்டாலுங்கூட நீ மறவாமல் சென்று உபசாரம் சொல்லிவிட்டுவா' என்றாள். நாலுபேர்களோடு சொல்லாமல் தானே தனியாகச் சென்று உபசாரம் சொல்லிப் பெருமை பெறவேணுமென்று ஆசை கொண்ட அவன் யாருடைய க்ருஹத்தில் மறுபடியும் மரணம் நேரப் போகிறதென்று வெகு ஆவலுடன் எதிர் பார்த்திருந்தான். ஒருவருடைய மனைவி அகாலத்தில் காலமாய் விட்டாள். அது மிகவும் சோசநீயமான தாகையால் அவளுடைய கணவன் மிகுந்த துக்கத்தில் கிடக்கிறான். இவன் உபசாரம் சொல்லப் புறப்பட்டுப்போய் 'ஸ்வாமிந்! அவள் உமக்குமட்டுமா மனைவியாயிருந்தாள்; ஊருக்கெல்லாமன்றோ மனைவியாயிருந்தாள்; இன்னும் கொஞ்சம் காலம் இவளிருந்தால் எங்களுக்கெல்லாம் எவ்வளவோ ஸௌகரியமாயிருக்குமே. எங்களுடைய துர்ப்பாக்கியம் அவள் போய்விட்டாள்' என்று இதையே திருப்பித் திருப்பிச் சொல்லுகிறானிவன். அந்த க்ருஹஸ்தன் மனைவி செத்ததற்கு அழுவனா; இந்த கர்ணகடோர வார்த்தைக்கு அழுவனா? இவன் முதுகில் நாலறை அறைந்து போக விட்டான். ... *

## 17. தெய்வச் செயலின் சிறப்பு

ஒரு மஹாநகரத்தில் ஒரு குடும்பம். அக்குடும்பத்தில் அருமையாகப் பிறந்து வளரும் புதல்வனுக்கு ஒருநாள் இரவில் மஹத்தான ஜ்வரபாதை உண்டாயிற்று. இரண்டு மைல் தூரத்தில் வைத்தியசாலை இருந்தது. நோயின் தன்மையைச் சொல்லியனுப்பி மருந்து வரவழைக்கலாமென்று கருதிய பெரியார், தமது பன்னிரண்டு வய

துள்ள சிறுவன்கையில் ஒரு ஸீஸாவும் ஒரு ரூபாயும் மருந்து விவரம் குறிக்கும் சீட்டும் கொடுத்து டாக்டரிடம் மருந்து வாங்கிவரும்படி சொல்லி அச்சிறுவனை யனுப்பினர்.

அவன் கனவேகமாகச்சென்று டாக்டரிடம் சேர்ந்தான், அப்போது இரவு சுமார் ஒன்பது மணி. மின்னலும் காற்றும் இடியுமாயிருந்தது. டாக்டர் மருந்து சாலையின் முன்னிலையில் உட்கார்ந்து சில ஆப்தர்களான பெரியமனிதர்களோடு பேசிக்கொண்டிருந்தார். அச்சமயம் இச்சிறுவன்சென்று செய்தியைத் தெரிவித்தும் அவர் அன்பர்களோடு வார்த்தையாடுதலில் மிக்க குதூஹலமாயிருந்ததனல் இச்சிறுவனது வேண்டுகோளைக் கணிசியாமலே யிருந்திட்டார்.

இவனும் சிறிது நிர்ப்பந்தித்துக் கூறவே, டாக்டர் 'இப்போது முடியாது, காலை வா' என்று அலக்ஷியமாகப் பேசினர். அதுகேட்ட சிறுவன் 'ஐயா! நான் இரண்டு மைல் தூரத்திலிருந்து வந்திருக்கிறேன்; வீட்டில் அண்ணனுக்கு நோய் மிகக் கடினமானது; இப்போது வேறெங்கும் மருந்து கிடைப்பதும் அரிதாயிருக்கின்றது. இப்போதே தாங்கள் மருந்து தராவிடில் நாளை காலைவரையில் அண்ணன் ஜீவித்திருப்பானென்பதும் ஸந்தேஹமே; அன்றியும், நான் மருந்து வாங்கிக்கொண்டு போகாமல் வெறுங்கையோடு சென்ருல் என் உயிர் தக்குவதும் கஷ்டமாகும். தாய் தந்தையர் என்னைப் புடைத்துவிடுவார்கள்; ஆதலால் மிகவும் தயவு செய்து பணம் பெற்றுக் கொண்டு மருந்து தரவேணுமென்று சொல்லி, மருந்தின் விவரம் காட்டும் சீட்டையும் ஸீஸாவையும் ரூபாயையும் மேஜையின் மேல் வைத்துக் கும்பிட்டான்.

இங்ஙனம் கெஞ்சி வணங்கிக் கேட்டதைக் கண்ட அங்குள்ள பெரியார்கள் மிகவும் மனமிரங்கி டாக்டருக்குச் சாலவும் சிபார்சு செய்தார்கள். மருந்து சீட்டைக் கண்ட டாக்டர் அது இரண்டு மூன்று தினுசுகள் சேர்த்துக் கலந்து கொடுக்க வேண்டிய மருந்தாக இருந்தபடியால் ஸ்வாரஸ்யமான வார்த்தையைவிட்டு எழுந்திருந்து இது செய்துகொடுக்க மனங்கொள்ளாமலேயிருந்தார். ஆனாலும் சிறுவனுடைய கெஞ்சுதலுக்கு மிக இரங்கிய அன்பர்கள் அதிகமாகத் தூண்டவே வருந்தியெழுந்து அதில் ஊக்கமில்லாமலே மருந்து சீட்டை நன்ருகக் கவனியாமல் வேறு சில மருந்துகளைக்கூட்டி ஸீஸாவில் கொட்டிக் கொடுத்தனுப்பிவிட்டார். சிறுவனும் மிக்க ஆனந்தத்தோடு அதைவாங்கிக் கொண்டு கனவேகமாகத் திரும்பினன்.

ஐந்துநிமிஷம் பொறுத்தபின் டாக்டருடைய கையில் வலிதான எரிச்சல் எடுத்தது. உடனே, எந்த மருந்துக்களைக் கலந்து கொடுத்தோமென்று கவனிக்கத் தொடங்கினர். ஞாபகப் பிசகினல் அக்நித்ராவகமும் பாய்ஸனை மருந்து மற்றென்றும் கலந்து கொடுக்கப்பட்டதாகத் திண்ணமாய்த் தெரிந்து கொண்டார். கொடுத்த அந்த மருந்து உட்கொள்ளப்படுமாகில் உடனே குடல் வெந்துபோய் பிராணபாயம் நேருவது நிச்சயம், அந்தோ! இப்படிப்பட்ட உயிர்க்கொலையான மருந்தைக்கொடுத்து விட்டோமே! சிறுவனே கனவேகமாகச் சென்று விட்டானே! இதுவரையில் மருந்து உபயோகப் படுத்தப்பட்டிருக்குமானல் உயிர்ச்சேதம் நேராமலிருக்கமுடியாதே, ஐயோ! கொலைபாதகனுக ஆய்விட்டேனே!, அந்தச்சிறுவன் இன்னன் இன்னவிடத்தான் என்ருவது தெரிந்தால் இப்போதே ஓடிப்போய் மருந்தை உட்கொள்ளாதபடி நிறுத்தலாம். இன்னதிக்கிலிருந்து அச்சிறுவன் வந்தானென்பதும் தெரிந்துகொள்ளாமற் போய்விட்டோமே. இரண்டு மைல் தூரத்திலிருந்து வந்ததாகச் சொன்னனேயல்லது இன்னவிடத்திலிருந்து வந்ததாக அவன் தெரிவிக்கவில்லையே! ஐயோ இந்த நள்ளிருளில் மின்னலும் இடியும் மழையுமான இச்சமயத்தில் எந்தப்பக்கம் ஓடி எந்தவிதமாக அச்சிறுவனைக் கண்டுபிடிக்க முடியும்? தெய்வமே! என்னை இப்படியும் கொடிய கொலைபாதகனுக ஆக்கிவிடலாமோ! என்று டாக்டர் துடிக்கிருர், தவிக்கிருர், துள்ளுகிருர், கதறுகிருர், அழுகிருர், அன்பர்கள் தேற்றகில்லாது தணறுகிருர். இவருடைய நிலைமை இதுவாயிருக்க;

மருந்து வாங்கிக்கொண்டு களிப்புடன் வேகமாச்சென்ற சிறுவனோ வென்றால் இருளில் மழையில் சென்றதனால் வழியில் கால்வழுக்கிக் கீழேவிழுந்து மருந்துஸீஸா வும் கீழே நழுவி உடைந்துபோக, மிகுந்த வருத்தத்துடன் அந்த டாக்டரிடமே திரும்பி வந்து 'ஐயா! என்கதி இப்படியாய்விட்டது; இந்தச் செய்தியைச் சொல்லிக் கொண்டு நான் வீட்டிற்குச் சென்றால் என் உயிரை வாங்கிவிடுவர்கள்; மறுபடியும் மருந்து வாங்கிக்கொள்ள என்கையில் ரூபாயுமில்லை; எப்படியாவது என்னைக் காப் பாற்றவேண்டியது உங்கள் தருமம்; தயவுசெய்து அந்தமருந்தை மறுபடியும் கொடுத் தீர்களானல் எனது அண்ணனுடைய உயிர் பிழைப்பதற்குமுன் என்னுயிர் பிழைக் கும்' என்று சொல்லி மன்றாடினன்.

இச்செய்தி கேட்டவுடனே டாக்டருக்குண்டான ஆனந்தத்திற்கு அளவுதான் இருக்குமோ? அச்சிறுவனைத் தலையேல் தூக்கிக்கொண்டு கூத்தாடினர், குலாவி னர். தெய்வத்தைப் போற்றினர், புகழ்ந்தார். இன்னு மென்னென்னவோ செய் தார். தெய்வபக்தி அதிகரிக்கப் பெற்றார். உடனிருந்த அன்பர்களைத் தழுவி எழுந்தும் பறந்தும் துள்ளிக்குதித்தார். உடனே அச்சிறுவனைத் தமது மோட்டார் காரில் உட்காரவைத்துக்கொண்டு தாமே நோயாளியின் வீட்டுக்கு நேரில்சென்று போதுமான சிகித்ஸையை இனமாகச் செய்து விரைவில் குணப்படுத்தினர். .... *

## 18. "மணிக்கொரு தடவை தோயபாநஸ்வீகாரம் செய்வது"

ஒரூரில் பண்டிதம் மந்யனொருவன் இருந்தான். தனக்குத் தெரியாதது எதுவுமே கிடையாதென்று எண்ணி யிருப்பவனுக்குப் பண்டிதம் மந்ய னென்று பெயர். இவனுக்கு ஸம்ஸ்க்ருத பாஷையில் அடியோடு பிரவேசம் கிடையாது. ஆனலும் எல்லாம் தெரிந்ததாக பாவனை. ஒருநாள் இவனுக்கு ஜ்வரபாதை யுண்டா யிற்று. சிகித்ஸைக்காக ஆயுர்வேத வைத்யரிடம் சென்றான். அவர் பெரும்பாலும் வடமொழிகளைக் கலந்தே பேசுபவர். இந்த ருக்ணனுக்கு ஒரு மருந்து கொடுத்தார். இதற்கு ஏதாவது பத்த்யமுண்டோவென்று கேட்டான் ருக்ணன்; 'ஒரு பத்த்யமு மில்லை, மணிக்கொரு தடவை தோயபாநஸ்வீகாரம் செய்வது' என்றார் வைத்யர். தோய மென்றால் தீர்த்தம். அதை மணிக்கொரு தடவை பானம் செய்துவரவேணு மென்று சொன்னபடி. தோயபாநஸ்வீகார மென்றால் இன்னதென்று இவனுக்கு விளங்கவில்லை. கேட்டுத் தெரிந்து கொள்ளலாமே; பண்டிதம் மந்ய னகையாலே அதற்கு வாய் எழவில்லை. அது கடையில் கிடைக்கிற ஒரு வஸ்துவாயிருக்கு மென்றும், யாரிடத்திலாவது கேட்டு வாங்கிக் கொள்ளலாமென்றும் கடையிலாவது விலை கொடுத்துப் பெறலாமென்றும் நினைத்து அதைப்பற்றி ஒன்றும் கேளாமலே வீட்டுக்குத் திரும்பி விட்டான். தோயபானமென்று வைத்யர் சொன்னதை இவன் தோபயாநம் என்று மாறுபாடாக நெஞ்சில் கொண்டுவிட்டான்.

பிறகு அக்கம் பக்கத்து வீடுகளிற் சென்று 'கொஞ்சம் தோபயானம் இருக்குமோ?' என்றான். இவன் ருக்ணனகையாலே ஏதோ ஔஷதி கேட்கிரு னென்று ஒவ்வொருவரும் எண்ணினர்கள். தோபயான மென்றால் என்னப்பா!' என்று ஒருவராவது கேட்கலாமே. ஒவ்வொருவரும் இவனுக்கு மேற்பட்ட பண்டிதம் மந்யராகையாலே 'உனக்கு தோபயானம் தெரியாதா?' என்று லேசாக ஏசி விடுவனே என்கிற கூச்சத்தினல் 'அது என்ன வஸ்து?' என்று ஒருவரும் கேட்க வில்லை. 'தோபயானமா? இத்தனை நாளிருந்தது, ஸமீபத்தில் தான் அது ஆய் விட்டது' என்கிறரொருவர். 'பெட்டி சாவி பையனிடமிருக்கிறது; அவன் எங் கேயோ போயிருக்கிறன்; உம்முடைய அவஸரத்திற்கு உதவாது போலிருக்கிறதே' என்கிறர் மற்ரெருவர். 'நம் ஆத்துக்காரி தான் வைத்துக் கொண்டிருந்தாள்,

அவள் பிறந்தகம் போயிருக்கிறாள், வந்த பிறகு வாங்கித் தருகிறேன்' என்கிறார் இன்னொருவர். இப்படி ஒவ்வொருவரும் ஒரோ வகையான சாக்கு போக்கு சொல்லு கிறாரே யொழிய ஒருவரும் தோபயானம் கொடுக்கவில்லை. 'அப்படி ஒரு வஸ்து கிடையவே கிடையாது' என்று ஒருவரும் சொல்லவில்லை. "ஸரி, கடையில் விலை கொடுத்து வாங்கிக் கொள்ளுகிறேன், அது என்ன விலை யிருக்கும்?" என்று ஒருவரைக் கேட்டான். "முன்பெல்லாம் ஸ்வல்ப விலைக்குத் தான் கிடைத்துக் கொண்டிருந்தது, இப்போது விலைவாசி எப்படி யிருக்குமோ தெரியாது" என்றாரவர். முடிவாகக் கடையிலேயே சென்று விசாரிப்போ மென்று துணிந்து கடைக்குப் போய் 'அப்பா! கால் ரூபாய்க்கு தோபயானம் கொடு' என்றான். கடைக்காரர்கள் எந்த சரக்கையும் இல்லையென்று சொல்லுவதில்லை; அப்படி சொல்லுவதை அச் லீலமாக நினைத்து 'மேலே சொல்லுங்கள்' என்கிறானொருவன்; 'கோடி கடையில் போய்க் கேளுங்கள்' என்கிறானொருவன். எவ்வளவு அலைந்தும் தோபயானம் கிடைக்கவில்லை யிவனுக்கு. இந்த அலைச்சலில் மூன்று நாள் கடந்து விட்டது. வைத்யர் மூன்றா நாள் மறுபடியும் தன்னிடம் வரச் சொல்லி யிருந்தபடியால் அவ ரிடம் சென்றான். உடல் நலம் எப்படி யிருக்கிறதென்று அவர் கேட்க, 'ஸுமாராக இருக்கிறது, ஆனால் தோபயானம் கிடைக்கவில்லை ஸார்' என்றான். அவர்க்கு இது புரியவில்லை. தோபயானமென்றால் என்ன? அது எதற்கு? என்று கேட்டார். 'மணிக்கொரு தடவை ஸ்வீகரிக்கும்படி தாங்கள் சொன்னீர்களே, அது தான்' என்கிறான் நோயாளி. 'அப்படி நானொன்றும் சொல்லவில்லையே' யென்கிறார் வைத்யர். நன்றாக ஞாபகம் பண்ணிப் பாருங்க ளென்கிறானிவன். சிறிது ஆலோ சித்த வைத்யர் 'அட பாவீ! தோய பானத்தைத் தோபயானமாக்கி விட்டையே' என்கிறார். ஆமாம், அது தான் அதுதானென்கிறானிவன். பரிபாஷையை அஸ் தானே உபயோகிப்பதனலாகும் அனர்த்தம் இத்தகைத் தாயிருக்கும். ... *

## 19. ஆஸ்திகனும் நாஸ்திகனும்

மிகச் சிறந்த ஆஸ்திக னொருவன். அவனுக்கு ஒருவனோடே அபரிமிதமான நேசம் ஏற்பட்டது. அவனோ பரம நாஸ்திகன். அவனுடைய பேச்சுக்கள் இவர்க்கு அடியொடு பிடிப்பதில்லை. ஆனாலும் அவனுடைய நேசத்தை விட்டுத் தொலைக்க முடியவில்லை. எப்படியாவது அவனை ஆஸ்திகனாகத் திருத்திவிட வேணு மென்கிற நசையினால் அவனை விடாது நேசித்து வந்தான். 'இப்படி நீ நாஸ்திகனா யிருப்பது தகவே தகாது' என்று பன் முறையும் சொல்லுவதுண்டு. அதற்கு அவன் உடனே பதில் சொல்லி விடுவன்—'அப்பா! அந்த கதை பேசாதே; தெய்வம் சாஸ்திரம் புண்யம் பாபம் என்பதை யெல்லாம் நான் ஒரு நாளும் நம்பமாட்டேன்' என்று தேங்கா யுடைப்பது போல் சொல்லி விடுவன். ஆனாலும் ஆஸ்திகனுடைய ஆசை தொலையவில்லை. இப்படி யிருக்கையில் ஒருநாள் அந்த நாஸ்திகன் ஓரிடம் செல்வதற் காகப் புறப்பட்டுப் போய்க்கொண்டிருக்கையில் மோடார்கார் மோதி அபரிமிதமான காயமடைந்து ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டான். பிராண ஸந்தேஹமுமுண்டாகி யிருந்தது. அவனை விசாரிப்பதற்காக ஆஸ்திகத் தோழன் சென்று 'திடீரென்று இப்படியாய் விட்டதே! என்ன காரணம்?' என்று வினவினான். அதற்கு நாஸ்திகத் தோழன் சொல்லுகிறான், 'ஆலோசியாமல் கொழுத்த ராகு காலத்தில் புறப்பட் டேன்; புறப்படும்போதே ஒரு விதவை எதிரில் வந்தாள்' என்று தொடங்கித் தனக்கு நேர்ந்த அபசகுனங்களைச் சொல்லி, அதுகளை லக்ஷியம் பண்ணாமல் புறப்பட்டுப் போன பலன் இப்படி விழுந்து கிடக்கிறேன்' என்றான். இதைக் கேட்ட ஆஸ்திகத் தோழன் வழிக்கு வந்து விட்டானிவன் என்று உள்ளே மகிழ்ச்சி கொண்டு இப்போது ஒன்றும் பேசவேண்டா மென்றெண்ணிச் சற்று நேரம் வேறு பேச்சுக்கள் பேசி விட்டுத் திரும்பினான்.

சில நாட்களில் அவன் உடல் நலம் ஒழுங்குபட்டுச் சுகமாய் வீடு வந்து சேர்ந்தான். பிறகு ஆஸ்திகத் தோழன் சென்று சந்தோஷமாக வார்த்தையாடி வருகையில் 'அன்று நான் ஆஸ்பத்திரியில் வந்து பேசுகையில், வீட்டைவிட்டு ராஹுகாலத்தில் புறப்பட்டதாகவும், எதிரே விதவை வருதல் முதலான அபசகுனங்களானதாகவும் சொன்னுயே, நினைவிருக்கிறதோ?' என்று வினவினுன். 'நினைவில்லாமலென்ன? நன்ருக நினைவிருக்கிறது; உண்மையில் அதன் பலனை ரொம்பவும் அனுபவித்து விட்டேனே' என்ருன். 'ஸரி, நீ ஆஸ்திகனுக மாறினதுபற்றி மிகவும் மகிழ்ச்சி' என்ருன் ஆஸ்திகத் தோழன். 'அப்பப்பா! அந்த பேச்சு மட்டும் பேசாதே, இந்த ஜன்மத்தில் நான் ஆஸ்திகனுக மாட்டேன், அந்த ஆசையை விட்டு விடு' என்ருனவன். 'ராகு காலமும் அபசகுனங்களும் விபரீத பலனைத் தருமென்று நீ எதனுலறிந்தாய்? கொஞ்சம் சொல்லு பார்ப்போம்' என்று வினவினுன் ஆஸ்திக நண்பன். அதன்மேல் விழித்துக் கொண்டானவன்; 'ஓகோ! அப்படியோ!' என்று ஆகாசத்தைப் பார்க்கிருன். ஆஸ்திகனுடைய விடா முயற்சி பலித்தது. ... .... .... .... .... .... *

## 20. நான்தானப்பா நவமி புருஷன்.

ஒருவன் தன்னுடைய மனைவியைச் சில நாள் பிறந்தகத்திற்கு அனுப்பிவைத்திருந்தான். திருப்பிக் கொண்டு வந்து விடும்படி கடிதங்களெழுதி யிருந்தான். நீரே இவ்விடம் வந்து சில நாளிருந்து விட்டு அழைத்துக்கொண்டு போம் என்று மாமியாரகத்திலிருந்து மாப்பிள்ளைக்குக் கடிதம் வந்தது. அப்படியே மாமியாரகம் புறப்பட்டுச் சென்று சிலநாள் அங்கே யிருந்துவிட்டு ஒருநாள் ஊருக்குப் புறப்பட நிச்சயித்து மாமனுர் மாமியார் முதலானுர்க்குத் தெரிவித்தான். அன்று நவமியாயிருந்தபடியால் 'மாப்பிள்ளே! நவமியில் புறப்படுவது பொல்லாது, நாளைக்குப் புறப்பட்டுப் போகலாம்' என்று பலரும் சொன்னுர்கள். மாப்பிள்ளை பிடிவாதக் காரனுதலால் 'நவமியுமாச்சு, நாசமுமாச்சு; நவமி என்ன பண்ணும்? இந்த பொட்டைச்சிசாஸ்திரங்களெல்லாம் என்னிடம் சொல்ல வேண்டாம்; இதோ நான் புறப்பட்டுப் போகிறேன்' என்று சொல்லிப் பிடிவாதமாகவே மனைவியுடன் புறப்பட்டு விட்டான். அவர்கள் தடுக்க முடியாமல் இசைந்து விட்டார்கள். இவன் மனைவியுடன் நடந்து செல்லா நின்ருன். வழியில் ஒரு பெரிய குளத்தைக் கண்டான்; அக்குளத்தின் கரையில் ஒரு திண்ணை. அதில் மனைவியை உட்கார்ந்திருக்கச் சொல்லிவிட்டு இவன் சங்கா பரிஹாரங்களுக்குப் போனுன். அதே தருணத்தில் ஒரு புருஷன் கணவன் போலவே வந்து 'அடீ! போகலாம், எழுந்திரு' என்ருன். அவள் கணவனேயிவனென்று கருதி அவன் பின்னுலே போகின்ருள். சிறிது நாழிகை கழித்து மாப்பிள்ளை குளத்தின் மேலே வந்து பார்க்கையில் மனைவி காணப்படவில்லை. வழியில் வருபவர்களைக் கேட்க, ஒரு புருஷனும் பெண்மணியும் போய்க் கொண்டிருப்பதாக அவர்கள் சொல்ல, இவன் ஓடிச்சென்று 'அடீ அடீ! இப்படி வா' என்கிருன். அவள் கண்ணுக்கு இவன் கணவனுகத் தோற்ருதபடியினுல் பதில் சொல்லாமல் அவன் பின்னேயே போகிருள். பிறகு அந்த புருஷனை நோக்கி 'அடே! அநீதி செய்யாதே' என்று பலவும் சொல்லி மிரட்டுகிருன். அந்த புருஷனே எதற்கும் அஞ்சவில்லை. இவனும் தொடர்ந்து செல்கிருன். போம் வழியில் போலீஸ் ஸ்டேஷன் தென்பட்டது. சடக்கென உள்ளே நுழைந்து இப்படியும் ஒரு அநியாயமுண்டா? என்று முறையிட்டு விஷயத்தைச் சொன்னுன். அதற்குள் அவ்விருவரும் ஒரு பர்லாங்கு தூரம் சென்று விட்டார்கள். போலீஸதிகாரி ஒரு ஜவானைத் துரத்தி அவர்களை வரவழைத்து விசாரிக்கையில், 'என் மனைவியை நானழைத்துக் கொண்டு போகிறேன், விசாரணை என்ன வந்தது?' என்கிருன். பெண்ணைக் கேட்டாலோ அவள் திக்ப்ரமம் பிடித்து நிற்கிருள். முடிவில் மனுதாரனை நோக்கி 'உன் மனைவிதா

னிவள் என்பதற்கு என்ன அடையாளம்?' என்று கேட்க, நான் தாலிகட்டினதுதான் அடையாளம் என்கிறான். இதே கேள்வி அசல் புருஷனை நோக்கிக் கேட்க, அவன் தெய்வ புருஷனுடையாலே அவளுடைய முழங்கால், தொடை, கழுத்துப்பட்டை முதலான அவயவங்களிலுள்ள மச்சங்களை ஒன்று தப்பாமல் அடையாளமாகக் கூற, அதிகாரி அவ்வடையாளங்களை உற்றுக் கவனித்து இவனே கணவனென்று நிச்சயித்து அவளை அவனோடே போகவிட்டார். மெய்யான கணவன் சிறிது தூரம் சென்று ஒன்றும் தோன்றாமல் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து அழுகிறான்.

அப்போது அந்த புருஷன் வந்து 'அப்பா! நவமி என்ன பண்ணும்? என்றாயே மாமியாரிடத்தில்; என்ன பண்ணிற்று பார்த்தையா? நான் தானப்பா நவமி புருஷன். இனி இப்படியெல்லாம் விதண்டாவாதங்கள் பேசாதே; ஜாக்கிரதை; இந்தா மனைவியைப் பெற்றுக்கொள்' என்று சொல்லி அவளை அங்கே விட்டு விட்டு மறைந்து விட்டான் நவமி புருஷன். .... .... .... .... *

## 21. ரோகியும் செவிடனும்.

ஒரு பெரியவர் லௌகிக வைதிகங்களில் நல்ல நிபுணராக விருந்து வந்தார். அவர் திடீரென்று செவிடராய் விட்டார். ஸாதாரணமான செவிடன்று, நல்ல செவிடு. அதனால் அவர் க்ருஹத்தை விட்டு எங்கும் வெளிக்கிளம்பாமல் ஏகாந்த சீலராயிருந்து வந்தார். க்ருஹத்தில் தம்மோடு கூடப் பழகுகிறவர்கள் தவிர மற்ற பேர்கள் இவரைச் செவிடரென்று அறியார். இப்படி யிருக்கையில் இவருக்கு மிகவும் ஆப்தரான வொரு பெரியவர் நோய்வாய்ப்பட்டு மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறார். அவரை நேரில் சென்று விசாரித்து வரவேணுமென்று இவர்க்கு ஆசை. ஆனால் தம்முடைய செவிடு வெளிப்பட்டுப் போகுமே யென்று ஸங்கோசப் படுகிறார். செவிடு எல்லாருக்கும் வருவதுதானே யென்று நினையாமல் இதை அவமானமாக நினைத்து விட்டார். ஆனாலும் போய் விசாரியாம லிருக்க முடியவில்லை. தமக்கு மிகவும் நண்பரான வொரு பெரியவருடன் கலந்து ஆலோசித்தார். அவர் ஒரு காகிதத்தில் எழுதிக் கொடுத்தார். (அதாவது) நீர் நோயாளி யிடம் புறப்பட்டுப் போய் 'உடம்பு எப்படி யிருக்கிறது' என்று கேளும். 'இருக்கிறது, ஸுமாராக இருக்கிறது' என்று சொல்லுவர். அதற்கு நீர் 'ரொம்ப ஸந்தோஷம்' என்று சொல்லும். பிறகு 'யார் வைத்யன்?' என்று கேளும். ஒரு டாக்டர் பெயரைச் சொல்லுவர். 'அவர் மிகவும் கெட்டிக்காரரான டாக்டர்; பிடித்த பிடி விடமாட்டார்; நீங்களும் அவரை விடாமல் அவரிடமே சிகித்ஸை கொள்ள வேண்டியது' என்று சொல்லும். பிறகு 'என்ன மருந்து' என்று கேளும். ஏதோவொரு மருந்தின் பெயரைச் சொல்லுவர். 'அது மிகவும் நல்ல மருந்து; அதையே ஸாப்பிட்டு வாரும்' என்று சொல்லிவிட்டு மேலே ஒன்றும் கேளாமல் தனுக்காய் வீடு வந்து சேர்ந்து விடும் என்று எழுதிக் கொடுத்தார். செவிடர் இதை நன்றாக மனப்பாடம் பண்ணிக் கொண்டார். இவ்விதமாகவே பேசிவிட்டு கௌரவமாய்த் திரும்பி விடுவோமென்று ஒருநாள் அந்த நோயாளியிடம் புறப்பட்டுச் சென்றார்.

அந்த ஸமயம் நோயாளி தாங்க முடியாத கிலேசத்திலிருந்து வருகிறார். பரமாப்தரான இவர் விசாரிக்க வந்தது பற்றிச் சிறிது சந்தோஷமுங் கொண்டு ஒரு நாற்காலியில் இவரை வீற்றிருக்கச் செய்தார். செவிடர் தாம் பாடம் பண்ணியிருந்த படியே விசாரிக்கத் தொடங்கி விட்டார். 'உடம்பு எப்படி யிருக்கிறது?' என்று முதற் கேள்வி கேட்டார். அதற்கு அவர் மிக்க வெறுப்போடு 'இருக்கிறதென்ன? யமன் கொண்டுபோனால் சுகப்படலாம்; அதற்கு வேளைவரவில்லை' என்றார். இவர் செய்திருந்த பாடப்படியே 'ரொம்ப ஸந்தோஷம்' என்று சிரித்துக் கொண்டே

சொல்லி விட்டார். நோயாளி 'இதென்ன? இப்படி சொல்லுகிறாரே' என்று ஆலோசிக்கிறார். பிறகு 'யார் வைத்யன்?' என்று கேட்டார். அதற்கு அவர் 'வைத்யனா, யமன் தான் வைத்யன்' என்றார். அதற்கு இவர் 'ரொம்ப ஸரி; அவர் மிகவும் கெட்டிக்காரரான டாக்டரென்று எல்லாரும் சொல்லுகிறார்கள்: அவர் பிடித்தபிடி விடமாட்டாராம். நீரும் அவரை விடவேண்டாம்' என்றார். நோயாளிக்கோ துக்கமும் கோபமும் தாங்கமுடியவில்லை. இவரைக் கறுக்கச் சிவக்கப் பார்க்கிறார். பிறகு செவிடர் 'என்ன மருந்து?' என்று கேட்டார். அதற்கு 'மருந்தா? சுடுகாட்டுச் சாம்பல் தான் மருந்து' என்றார் நோயாளி. அது கேட்ட செவிடர் 'அப்படியா? அது நல்ல மருந்து; அதையே விடாமல் உபயோகப்படுத்தி வாருங்கள்? என்றார். இவர் செவிடராய் விட்டாரென்று தெரிந்து கொள்ளமாட்டாத நோயாளி மிகவும் அவமரியாதையாகப் பேசித் துரத்தி விட்டார். .... .... *

## 22. "யோக க்ஷேமம் வஹாம்யஹம்."

ஓரூரில் ஒரு பெரியவர் வாழ்ந்து வந்தார். அவர் மிகவும் ஏழை. பித்ரார்ஜிதமான க்ருஹம்மட்டும் ஒன்றுண்டு. அதில் ஒரு பாகத்தை வாடகைக்கு விட்டு அதிலிருந்து கிடைக்கும் குடிக்கூலியினால் ஜீவித்து வந்தார். குடும்பம் கொஞ்சம் பெரிதாய் விடவே அந்த வருமானம் போதாமல் உஞ்சவ்ருத்தி செய்து ஒருவாறு வாழ்ந்து வந்தார். இப்படியிருக்கையில் அவ்வூரில் ஒரு வித்வான் ஒரு மண்டபத்தில் கீதையுபந்யாஸம் செய்து கொண்டு வந்தார். ஒரு நாளும் அந்த கோஷ்டிக்குப் போகாமலிருந்த விவர் ஒருநாள் யாத்ருச்சிகமாக அங்குச் சென்று உட்கார்ந்தார். அன்று உபந்யாஸகர் "அநந்யாச் சிந்தயந்தோ மாம் யே ஜநாঃ பர்யுபாஸதே, தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோக க்ஷேமம் வஹாம்யஹம்." என்கிற சுலோகத்தைப் பரக்க உபந்யஸிக்கிறார். அதிலும் * யோக க்ஷேமம் வஹாம்யஹம் * என்கிற உயிரான பாகத்தை வெகு ரஸமாகக் கல்லும் கரையும்படி பேசுகிறார். "அவரவர்கள் தங்கள் தங்கள் யோக க்ஷேமங்களைத் தாங்களே நிர்வஹித்துக் கொள்வதாக நினைத்துச் செருக்கியிருக்கிறார்களே யொழிய ஸர்வேச்வரன்தான் நிர்வஹித்துப் போருகிறானென்பதை ஒருவர்கூட அறிந்திலர்; அரசன் குற்றவாளிகளுக்காகச் சிறைச்சாலை ஏற்பாடு செய்கிறான்; அதில் அடைக்கப்படுகிறவர்களுக்கு வேண்டிய உணவை அந்த அரசன் தானளிக்கிறானே யொழிய அவர்களையே தேடிக் கொள்ளும்படி செய்வதில்லை. உணவளிக்க சக்தியில்லாத பிரபு சிறைச்சாலையை ஏற்படுத்தவே மாட்டான். ஸர்வேச்வரன் ஒரு மஹாப்ரபு. அவன் குற்றவாளர்களான நம்மை இந்த ஸம்ஸார மண்டலமாகிற சிறைச்சாலையிலடைக்கிறான். அடைபட்டவர்கள் தாங்களே உணவு தேடிக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. மலைகளில் பெரிய பாறைகளைக் கல்தச்சர்கள் உடைக்கும்போது அதனுள்ளே தேரையைப் பார்க்கிறார்கள். அந்தத் தேரைக்கு ஜீவனாதாரமாக அங்கே ஒரு சிறு குழியையும் அதில் தண்ணீரையும் கடவுள் படைத்திருப்பதைக்கண்டு ஆச்சரியமாகச் சொல்லுகிறார்கள். செடி வைத்தவன் தண்ணீர் கொட்டுகிறான். ஆடுமாடுகளை வளர்ப்பவன் அவற்றுக்குத் தீனியிடுகிறான்" என்றிப்படி சில த்ருஷ்டாந்தங்களை யெடுத்துக் கூறி, நம்முடைய யோக க்ஷேமங்களைத் தன் பொறையாக நிர்வஹிப்பவன் பகவான்தானே யென்றும், ஸம்ஸாரிகள் தங்களுடைய அவிவேகத்தினால் வீணாக அலைச்சல்படுகிறார்களென்றும் வெகு இனிமையாகப் பேசி முடித்தார் உபந்யாஸகர்.

இதையெல்லாம் ஊக்கத்தோடு கேட்ட அப்பெரியவர் ஸர்வேச்வரனே யோக க்ஷேம நிர்வாஹகன் என்பதில் திடமான நம்பிக்கை கொண்டார். மறுநாள் தொடங்கி உஞ்சவ்ருத்திக்குச் செல்வதை நிறுத்திக் கொண்டார். வீட்டில் ஒரு பாகத்தை வாடகைக்கு விட்டிருந்தாரே, அதையும் தவிர்த்து விட்டார். தம் க்ரு

ஹத்தில் பகவத்கீதை ஓலைச் சுவடியொன்றிருந்தது; அதில் * அநந்யாச் சிந்த யந்தோ மாம் * என்கிற ச்லோகமுள்ள விடத்தில் மஞ்சள் காப்பை கெட்டியாகத் திணித்துவிட்டார். பகவானை அநந்யபக்தியுடன் சிந்தனைசெய்து வந்தார். பகவான் இவரிடத்தில் மிகவும் ப்ரஸந்ந ஹ்ருதயனுகி இவருடைய குடும்ப நிர்வாஹத்தைத் தானே செய்து வந்தான். அயாசிதமாகப் பணம் காசுகளும் அமுதுபடி காய் கறிகளும் கிடைக்கும்படி செய்து வந்தானெம்பெருமான். பெரியவருடைய கால க்ஷேபம் நிர்விசாரமாக நடைபெற்று வருகிறது. இப்படியே இரண்டு மூன்று வருடங்கள் பேரின்ப வெள்ளமாகச் சென்றன.

எம்பெருமான் எப்படிப்பட்டவர்களையும் பரீக்ஷிப்பதென்று ஒன்றுண்டே. இவருடைய உறுதியையும் பரீக்ஷிக்க வெண்ணி இவர்க்கு ஒருவிதமான வருமானமும் கிடைக்காதபடி செய்து வந்தான். 5, 6 நாள்கள் இப்படி கடந்து விட்டன. பெரியவர் உறுதி குன்றுமலே யிருந்து வந்தார். ஆனாலும் பசிக்கு ஆற்றமாட்டாத சிறு பிள்ளைகள் என்ன பண்ணும்? அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்கள் எத்தனை நாளைக் குச் சோறிடுவர்கள். இவரும் தேவியாரும் எத்தனை நாளைக்குத்தான் பட்டினி கிடப்பர்கள்? எம்பெருமான் திருவருளை ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்து ஏமாற்ற மடைந்து விட்டபடியால் இனி பழையபடி உஞ்சவ்ருத்திக்குப் போகவேண்டியது தானென்று எண்ணிவிட்டார். அதற்கும் கொஞ்சத்தில் மனம் துணியாமலிருந்தது. இருந்து என்னபண்ணுவது? ஒரு நாளிரவு வெகு தூரம் ஆலோசித்து 'நாளை காலை அனுஷ்டானத்தை முடித்துக்கொண்டு உஞ்சவ்ருத்திக்குப் புறப்படுவது' என்று முடிவுசெய்து கொண்டார். பகவத்கீதை ஓலைச் சுவடியில் * யோக க்ஷேமம் வஹாம் யஹமென்ற விடத்தில் முன்பு மஞ்சள் காப்பு பூசியிருந்தாரே, அதை அவித்து விட்டு அங்கே கரிபூசி விட்டார்.

மறுநாள் பின் மாலை யெழுந்து வழக்கப்படி அனுஷ்டானத்திற்குக் குளஞ் சென்றார் பெரியவர். அவர் தினந்தோறும் ஏழு மணிக்குக் குளத்தினின்று திரும்பி வருவது வழக்கம். அன்று கீதாசார்ய பகவான் என்ன பண்ணி யிருக்கிறார்; ஒரு சிறு பிள்ளை வடிவெடுத்தார். கீதைச் சுவடியில் இவர் மஞ்சள் காப்பை யவித்துக் கரி பூசி யிருந்தாரே, அந்த கரியை யெடுத்துத் தம் உதட்டில் தடவிக் கொண்டார். பழைபபடியே அங்கு மஞ்சளைப் பூசிவிட்டார். அந்த ச்லோக மிருக்கிற ஏடு முழு வதையும் மஞ்சள் மயமாக்கி விட்டார். காலை 6 மணி முதல் 6-55 வரையில் மளிகைச் சரக்குகளைக் கூடை கூடையாகத் தலையில் சுமந்துகொண்டு பெரியவருடைய க்ருஹத் தில் கொண்டுவந்து சேர்க்கிறார். ஆறரை மணி வரையில் வாசற் கதவு திறவாமலிருந்த படியால் மிக விசாலமான அந்த க்ருஹத்தின் வெளித் திண்ணைகளிலும் வாசல் தீராங்கியிலும் கூடைகளாகவே நிரப்பி விட்டான் ஸ்ரீ க்ருஷ்ணகிசோரன். ஆறரை மணிக்குக் கதவு திறந்தபடியால் அதன் பிறகு மளிகை ஸாமான் ஒன்று தப்பாமல் கூடை கூடையாகவும் டின் டின்னுகவும் கொணர்ந்து முற்றம் கூடம் முதலான எல்லா விடங்களிலும் நிரப்பி விட்டான். க்ருஹிணியானவள் இந்த பையனுடைய வடிவழகைக் கண்டு மயங்கி நிற்கிருளே யொழிய 'அப்பா! நீ யார்?' என்று கேட்க அவளுக்கு வாய் எழும்பவில்லை. தன்னுடைய யஜமானர் யாரோவொரு பெரிய ஸேட்டைப் போய்ப் பார்த்திருக்கக் கூடும்; அந்த ஸேட்டு இப்படி ஸாமான்களை யனுப்பிக்கொண்டிருக்கிறார் போலும் என்று நினைத்து உள்ளம் பூரித்துக் கிடக் கிருள். குளம் சென்ற பெரியவர் திரும்பிவரும் ஸமயமாயிற்றென்று தெரிந்து கொண்ட தேவதா ஸார்வபௌமன் மறைந்து விட்டான். பெரியவர் க்ருஹத் தண்டை வந்ததும் சரக்குகள் நிரம்பி யிருப்பதைக் கண்டு என்ன நினைத்துக் கொண்டாரென்றால், யாரோவொரு மளிகைவியாபாரிக்கு நம்முடைய க்ருஹத்தை மனைவி வாடகைக்கு விட்டு விட்டாள் போலும்; மாதம் 50, 60 ரூபாய் வாடகை பேசி

யிருப்பள் போலும் என்று நினைத்துக் கொண்டு, தாம் குறடேறி உள்ளே போவதற்கு வழி கிடைக்காமையால் அடீ! அடீ!! என்று மனைவியைக் கூப்பிட்டு, வீட்டை வாடகைக்கு விட்டாலும் இப்படி நமக்கு வழிகூட இல்லாதபடியா விடுவது? இது என்ன அசட்டுக் காரியம்? என்று நொந்து கொண்டே ஒருவாறு சிரமப்பட்டு உள்ளே புகுந்தார். எங்கும் ஓரிடத்திலும் அடியிட முடியவில்லை; 'அடீ! இது என்ன அசட்டுக் காரியம்! இப்படிப்பட்ட பைத்தியம் உண்டா? வாடகை 100, 200 தான் கொடுத்தாலும் நமக்குக் கூட இடமில்லாதபடியா இப்படி விட்டு விடுவது? வாடகை பேசின முதலாளிஎங்கே? வா இப்படி' என்று அதட்டிப்பேசுகிறார்பெரியவர். அவளோ 'எனக்கென்ன தெரியும்? பெட்டைச்சியான நான் எங்கே போவது, யாரிடம் வாடகை பேசுவது, நீங்கள் சொல்லுவது ரொம்ப நன்றாயிருக்கிறது, நீங்கள்தான் யாரோவொரு பெரிய பிரபுவைப் பிடித்து இவை யெல்லாமனுப்பியிருக்கிறீர்களென்றன்றோ நான் நினைத்திருப்பது' என்றாள். 'எனக்கு எந்த பிரபு தெரியும்? நான் குளத்துக்கன்றோ போய் வருகிறேன், இதைப்பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாதே; ஸரி. இந்த சரக்குகளையெல்லாம் இங்கு யார் கொண்டு வைத்தது?' என்றார். 'நீங்கள் குளத்திற்குப் போனபிறகு நான் வாசற் கதவைப் போட்டுக்கொண்டு உறங்கிக் கிடந்தேன்; ஆறரைமணி ஸுமாருக்கு வாசற் கதவைத் திறந்தால் திண்ணை தீராங்கி யெல்லாம் கூடை மயமாகக் காணப்பட்டது. பிறகு உள்ளேயும் கூடைகள் வரத் தொடங்கின; யாரோவொரு கறுப்பான பையன், பத்தெட்டு வயதுதானிருக்கும்; பார்க்கப் பதினாயிரங் கண் வேண்டும்; அவனை நீ யாரப்பா! என்று கேட்கவும் எனக்கு வாயெழவில்லை. உதடு நிறைய கரியாயிருந்தது; அந்த வொரு பையனே இவ்வளவு ஸாமான்களையும் கொண்டு வைத்தான்' என்றாள்.

'உதடு நிறையக் கரியாயிருந்தது' என்ற வார்த்தை காதில் விழுந்தவுடனே இவர் முன்னாளிரவு பகவத்கீதைச் சுவடியில் மஞ்சள் காப்பை நீக்கிக் கரி பூசினதை நினைத்துக் கொண்டார்; உடனே உள்ளேயோடி அந்தச் சுவடியை யெடுத்துப் பார்க்கிறார்; தாம் பூசின கரி சிறிதுமில்லை. ஏடு முழுவதும் மஞ்சள் காப்பா யிருப்பதைக் கண்டு வியக்கிறார். மனைவி பெற்ற பேறு நாம் பெறவில்லையே யென்று கத்துகிறார் கதறுகிறார், ஆகாசத்தை நோக்கி அழுகிறார் தொழுகிறார். அழுது தொழுது துதித்துக் கண்ணனுடைய காட்சியையும் பெற்றுக் களிக்கிறார். .... .... *

## 23. அசட்டுப் பரமைகாந்தியின் அற்புத அனுட்டானம்.

ஓர் அக்ரஹாரத்தில் ஒரு பரம வைதிகரிருந்தார். அவர் ஆசாரத்தில் மிக்க ப்ரஸித்தி பெற்றவர். 'நெருப்பையும் அலம்புகிறவர்' என்று அவரைப் பற்றிச் சொல்லுவர்களாம். எல்லாரும் தம்மைப் போலவே ஆசார சீலர்களாயிருப்பர்களென்று நம்பியிருப்பராம். இரவில் எல்லாரும் படுத்து உறங்கிப் போன பிறகு தாம் எழுந்து திண்ணைகளில் வைத்திருக்கிற தீர்த்தச் சொம்புகளைப் பார்ப்பராம்; அவற்றில் ஜல மிருந்தால் உடனே மனைவியை யெழுப்பி 'அடீ! இப்படிப்பட்ட அசட்டுக் காரியம் செய்கிறாயே; சொம்பில் எதற்காக ஜலத்தை வைத்தாய்? திருடன் வந்தால் கையை யலம்பிக் கொண்டு சொம்பைக் கொள்ளை கொண்டுபோய் விடுவனே!' என்பராம். அன்பர்களே! இந்த வார்த்தையின் கருத்து தெரிகிறதோ? இந்த சிஷ்டர் தாம் எப்போது சொம்பை யெடுத்தாலும் கையை யலம்பிக் கொண்டே யெடுப்பது வழக்கமாதலால் சொம்பைத் திருடுவதற்குக் கள்ளன் வந்தால் அவனும் கையை யலம்பிக்கொண்டு தான் சொம்பை யெடுப்பனென்றும், சொம்பில் ஜலமில்லாமலிருந்தால் 'ஐயோ! கையலம்ப ஜலமில்லையே, கையலம்பாமல் எப்படி சொம்பைத் தொடுவது!' என்று கொண்டு சொம்பைக் களவு செய்யாமலே போய் விடுவனென்றும் இப்படி யொரு அசட்டுத்தனமான அபிப்ராயங் கொண்டு இராக்காலங்களில் சொம்புகளில் ஜலம் வைக்கக் கூடாதென்று தினந்தோறும் தேவியாருக்கும் மற்றுள்ளவர்களுக்கும் கட்டளை யிடுவராம். இவர் திருமாளிகை வாசலில் தென்னை

மரம் ஒன்றுண்டு. அதில் குலை குலையாகக் காய்கள் காய்த்திருந்தன. ஒரு நாளிரவு 12 மணிக்குக் கள்ளன் மரத்திலேறிக் காய்களைப் பறித்துக் கொண்டிருந்தான். உள்ளே இடை கழியில் சயனித்துக் கொண்டிருந்தவிவர் ஓசையினல் செய்தி தெரிந்து கொண்டு நிச்சப்தமாகக் கதவைத் திறந்து மேல் நோக்கிப் பார்க்கையில் கள்ளன் காய் பறிக்கக் கண்டார். இரண்டு மைல் தூரத்திலிருக்கிற போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று அதிகாரியிடம் சொல்லி அவரை யழைத்து வந்து கள்ளனைப் பிடித்துக் காவலில் வைக்கவேணு மென்று எண்ணினர். தான் இரண்டு மைல் தூரம் போய் வருவதற்குள் கள்ளன் இறங்கி ஓடிப்போய் விட்டால் என்ன பண்ணுவதென்று அதைப் பற்றியும் ஆலோசித்தார். உடனே ஒரு யுக்தி ஸ்புரித்தது. தினப்படி தாம் ஆராதிக்கிற ஆசார்ய பாதுகையை யலம்பித் தீர்த்தம் கொணர்ந்து மரத்தடியில் நன்ருகத் தெளித்துவிட்டு அதை உரக்கச் சொல்லிவிட்டோமானல் பெரிய ஆசார்யருடைய பாதுகையின் பரம பவித்திரமான தீர்த்தத்தை எப்படி மிதிப்பதென்று அஞ்சிக் கள்ளன் கீழே யிறங்க மாட்டான்; மேலேயே திகைத்துக் கிடப்பன், போலீஸ் அதிகாரிகள் வந்து தவருமல் பிடித்துக் கொள்ளுவர்கள் என்று உறுதி கொண்டு கனவேகமாக நீராடி உள்ளே சென்று பாதுகையின் தீர்த்தத்தைக் கொணர்ந்து மரத்தைச் சுற்றிலும் வெகு விசாலமாகத் தெளித்துவிட்டு, தாம் அப்படி செய்ததை உரக்க உத்கோஷித்து விட்டு ஓடினர் போலீஸ் ஸ்டேஷனுக்கு. அயர்ந்து உறங்குகின்ற அதிகாரியை யெழுப்பினர். அவர் வெகு சிரமப் பட்டு எழுந்து என்ன செய்தி யென்று கேட்க, 'வேகமாகப் புறப்பட்டு வாருங்கள், தேங்காய்க் கள்ளனைக் கையும் பிடியுமாகப் பிடிக்கவேணும்' என்ருர். 'ஐயங்காரே! நீங்கள் உங்கள் வீட்டை விட்டுப் புறப்பட்டு எத்தனை நாழிகை யிருக்கும்?' என்று அதிகாரி கேட்க, 'ஒன்றரைமணி காலத்துக்கு மேலிருக்கும், இரண்டு மணி கூட இருக்கும்' என்ருர். 'இது வரையிலுமா ஒரு கள்ளன் தென்னை மரத்திலேயே யிருப்பன்?' என்று கேட்கிருர் அதிகாரி. 'தேங்காய் போவதைப் பற்றி யெனக்குக் கவலை யில்லை; என்னுடைய சாதுரியத்தைத் தாங்கள் காணவேணும். அதற்காகவன்ருே நான் ஓடிவந்திருக்கிறேன்' என்ருர் பெரியவர். 'என்ன சாதுரியம்? அதைக் கொஞ்சம் சொல்லுங்கள் கேட்போம்' என்ருர் அதிகாரி. தாம் வெகு யுக்தியாகச் செய்த காரியத்தை வெகு அட்டஹாஸமாகச் சொல்லுகிருர் பெரியவர். அதிகாரி, "சுவாமிகளே! நீங்கள் கலியுக புருஷர்களல்லீர்; கிருத யுக புருஷர்கள். நல்லது போய் வாருங்கள், கள்ளன் தென்னை மரத்தின் மேலேயே யிருப்பனுதலால் நீங்கள் நாலைந்து பேர்களாக மரத்தின் மீதேறி அவனை எளிதாகக் குமைக்கலாமே. நான் ஏதுக்கு?" என்று சொல்லிப் படுக்கையில் சேர்ந்தார். இப்படிப்பட்ட கிருதயுக புண்யவான்கள் இக்காலத்திலு மிருக்கிருர்கள். .... .... .... *

## 24. அம்மா முழுங்கி விடட்டுமா?

ஒரு பெண். அவள் இயற்கையாகவே குரூபி. முகத்தைப் பார்த்தால் பேயோ பிசாசோ? என்று சந்தேகிக்க வேண்டும்படியாகவே யிருக்கும். 'காக்கைக் குத் தன் குட்டி பொன் குட்டி' என்கிற நீதிப்படி குரூபிகளான பெண்களும் பெற்ருேர் கண்ணுக்கு அழகாகவே தோன்றுவதுண்டே; இந்தப் பெண் விஷயத்தில் அந்த நீதியும் பழுதாய் விட்டது. இந்தப் பெண்ணை எவன் மணந்து கொள்ளப போகிருனென்றே அல்லும் பகலும் அலமந்து கொண்டிருந்தார்கள். ஆனுலும் முயற்சியை விடாமல் பலவிடங்களிலும் வரன் விசாரித்துக் கொண்டே யிருந்தார்கள். ஒவ்வொருவரும் வந்து பார்த்து 'இந்த பயங்கரமான முகத்தோடே எப்படி பழகுவது!' என்று சொல்லிக் கொண்டே திரும்பி விடுகிருர்கள்.

பெண்களிற்போல ஆண்களிலும் குரூபிகளுண்டே; அப்படி குரூபியான வொருவன் இவளாவது கிடைத்தால் போதுமென்றெண்ணித் தான் மணந்து கொள்ளுவதாக இசைந்தான்; அவனுடைய தாய் தந்தையரும் உடன்பட்டு ஒருநாள் நிச்சி

தார்த்தம் செய்ய நாளிட்டாயிற்று. பெண்ணை மணையில் உட்கார வைத்து வரனைச் சேர்ந்தவர்கள் சேலை வாங்கிக் கொடுத்து தெருவிலுள்ள பெரியார்கள் பலர் வந்து வேதமோதி ஆசீர்வாதம் செய்யும் சடங்குக்கு நிச்சிதார்த்தமென்று பெயர். இது வரையில் அந்தப் பெண்ணை அதிகமாக யாரும் பாராதபடிக்கு வளர்த்து வந்திருக்கிறார்கள். இப்போது பலர் பார்க்கவேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டது. இயற்கையழகு இல்லாமற் போனாலும் செயற்கையழகு செய்து கொள்வதுண்டே. அந்த வகையில் பெண்ணின் தாயானவள் ஓரழகு செய்விக்க நினைத்தாள். பெண்ணுக்குக் கீழுதடும் மேலுதடும் வெளுத்திருப்பது தனிப்பட்ட ஒரு கோரம். அது கொஞ்சம் மறையும்படியாகச் செய்வோமென்று வெற்றிலைபாக்கு போட்டுக் கொள்ளச் சொல்லி 'பெண்ணே! வெற்றிலை ரஸத்தை உடனே விழுங்கிவிடாதே; இரண்டொரு நாழிகை அந்த ரஸம் வாயில் ஊறிக்கொண்டிருக்கட்டும்; விழுங்கிவிடு என்று நான் சொல்லுகிறபோது விழுங்கு; அவஸரப்பட்டு முன்னாடி விழுங்கி விடாதே' என்று சொல்லி வைத்தாள் தாய். பெண் அப்படியே செய்கிறேனென்றது. மணையில் உட்காருவதற்கு முன்னே விழுங்கச் சொல்ல வேணுமென்று நினைத்திருந்த தாயார் அது சொல்ல மறந்து போனாள். பலரும் கோஷ்டியாக வீற்றிருக்கிறார்கள். பெண்ணும் மணையில் உட்கார்ந்தாயிற்று. பெண்ணைப் பார்ப்பவர்களெல்லாரும் 'இது பூதமா! ப்ரேதமா! பேயா பிசாசா' என்று திகைத்திருக்கிறார்கள். இந் நிலைமையில் பெண் 'அம்மா! முழுங்கி விடட்டுமா?' என்றது. வெற்றிலை ரஸத்தை முழுங்கி விடட்டுமா வென்று கேட்டபடி. அங்கிருந்தவர்களெல்லாரும் 'இது பூதமா, ப்ரேதமா' என்று திகைத்திருந்தவர்களாதலால் 'அம்மா முழுங்கிவிடட்டுமா?' என்று பெண் கேட்டவுடனே, 'ஓகோ! நம்மையெல்லாம் முழுங்கப்பார்க்கிறது இது' என்று மருண்டு ஒவ்வொருவரும் உயிர்தப்பினால்போதுமென்று எழுந்து கனவேகமாகச்சென்று விட்டார்கள். .... .... .... .... .... .... *

## 25. இவ்வருஷம் அருந்ததியா மதுவா?

ஓரூரில் மஹாதனிகரொருவர் இருந்தார். அவர் ஏதோ தகாத காரியம் செய்து ஊரார்களால் ஒதுக்கப்பட்டிருந்தார். ஹவ்யகவ்யங்களுக்கு சிஷ்டர்கள் யாரும் அவருடைய க்ருஹத்துக்குப் போவதில்லை. இப்படியிருக்கையில் அவருடைய பிதாவுக்கு ச்ரார்த்தம் வந்தது. நிமந்த்ரணத்திற்குப் பலரையும் வேண்டினார். ஒருவரும் இசையவில்லை. அவர் தனிகராகையாலே ஒரு சிஷ்டரை 'வெள்ளிப் பாத்திரமும் வேஷ்டியும் துட்டு காசுகளும் நிறையக் கொடுக்கிறேன், வாரும்' என்றழைத்தார். அவர் அதற்கு ஆசைப்பட்டு இசைந்து சென்று நிமந்த்ரணம் புஜித்து வந்தார். அவரைப் பலரும் நிந்தித்தார்கள். 'ஏதோ பொருள் கிடைக்கிறதென்று வ்ராத்யன் வீட்டிலே போய் புஜிக்கலாமா?' என்று பலரும் கர்ஹித்தார்கள். அதற்கு அவர் சொன்னார் 'அந்த வ்ராத்யனைப் பற்றியா நான் போனேன்? அவனுடைய தருமபத்னி ஸாக்ஷாத் அருந்ததியல்லவா, அவளுக்காகப் போனேன்' என்றார். அடுத்த வருஷத்திலும் ச்ராத்த நிமந்த்ரணத்திற்கு இவர் முயற்சி செய்தார். ஆனால் இவரைக் கூப்பிடாமல் வேறொருவரை வரித்துக் கொண்டார்கள். அப்போது, முன் வருஷத்தில் நிமந்த்ரணம் புஜித்தவிவரை 'ஏன் இவ்வருஷம் போகாமல் விட்டுவிட்டீர்?' என்று பலரும் வினவினார்கள். அதற்கு 'அந்த வ்ராத்யன் மது' என்றார். குடிகாரப் பயல் என்றபடி. இவ்வருஷம் தன்னை நிமந்த்ரணத்திற்கு அழையாதபடியினால் அவனைக் குடிகாரப்பயலென்று வைதுகொண்டு கிடந்தார். பிறகு மூன்றாவது வருஷத்தில் அந்த ச்ரார்த்ததினம் அணுகிற்று. அப்போது இவரைக் காண்பவர்களெல்லாரும் 'ஓய்! இவ்வருஷம் அருந்ததியா மதுவா?' என்றார்கள். நிமந்த்ரணம் கிடைத்து அவன் மனைவியை அருந்ததியென்று கொண்டாடப் போகிறீரா? நிமந்த்ரணம் கிடைக்காமல் அவனை (மது) குடிகாரப் பயலென்று வையப் போகிறீரா? என்று கேட்டபடி. "என்ன சொல்லும்படி நேருமோ? இன்னும் தெரியவில்லை" என்கிறார் வெட்கமின்றி. இப்படிப்பட்ட பணப் பேய்களைப் பிணப் பேய்களாக நினைக்கத்தகும்.

## 26. "சேச்சு ஸௌக்கியமா? பாச்சு எங்கே?

சேஷாத்ரி ஐயங்காரென்பவரும் பார்த்தஸாரதி ஐயங்காரென்பவரும் ஸஹோதரர்கள். ஒருவர் ஹைகோர்டு ஜட்ஜ். மற்றொருவர் ஜில்லா கோர்டு ஜட்ஜ். இருவரும் அவிபக்த குடும்பமாக வாழ்கிறார்கள். இவர்களுக்குத் தாயார் மனைவி மக்கள் எல்லாருமுண்டு. ஜட்ஜ்கள் இருவரும் தினப்படி 10 மணிக்கு கோர்ட்டுக்குப் போய்விடுவார்களன்றோ. அதன் பிறகு [அவர்களிருவரும் வீட்டில் இல்லாத ஸமயம் பார்த்து] ஒருவர் அடிக்கடி அவ்விடம் வந்து 'சேச்சு ஸௌக்கியமாயிருக்கிறானா? பாச்சு எங்கே போயிருக்கிறான்?' என்று விசாரிப்பது வழக்கம். அவர்களோ பெரிய மனிதர்கள். உலகம் போற்றும் அதிகாரிகள். அவர்களை யாவரும் சேஷாத்திரி ஐயங்கார், பார்த்தசாரதி ஐயங்கார் என்று உயர்வாகக் கூறுவது வழக்கமேயொழிய சேச்சு என்றும் பாச்சு என்றும் கொச்சை நாமமிட்டுக் கூறுவது கிடையாது. இந்த நபர் ஒருவரே அடிக்கடி அவ்விடம் வந்து இந்த விதமாகப் பேசிப் போவது வழக்கமாய் விட்டது. இதனால் வீட்டுக்காரர்கள் என்ன நினைத்துக் கொண்டார்களென்றால் இவர் அவ்விருவர்க்கும் அந்தரங்க நண்பராயிருக்க வேண்டும்; இல்லையானால் இப்படி சேச்சுவென்றும் பாச்சுவென்றும் சொல்லுவரா? என்று கொண்டு, வருகிறபோதெல்லாம் இவருக்கு விசேஷமாகப் பலஹாரங்கள் கொடுப்பதும் காபி கொடுப்பதுமாயிருந்து வந்தார்கள். விடுமுறை நாட்களில் அவ்விருவரும் வீட்டிலேயே தங்கியிருப்பார்களே, அப்படிப்பட்ட ஸமயங்களில் இவர் அங்கு தலைகாட்டுவதே கிடையாது; இல்லாத ஸமயம் பார்த்தே வருவதும் வார்த்தையாடுவதும் பலஹாரங்கள் பெற்றுப் போவதுமாயிருந்தார். இதனால் அவ் வீட்டுக்காரர்களுக்கு இவரிடம் ஸந்தேஹம் மேற்பட்டது. இவரை இன்னாரென்று தெரிந்து கொள்ள வேணுமென்கிற அவா உண்டாயிற்று. ஒருநாள் ஜட்ஜுகளிருவரும் வீட்டிலிருக்கையில் அவர்களுடைய தாயார் 'அடிக்கடி ஒருவர் இங்கு வருகிறார்; சேச்சு ஸௌக்கியமா? பாச்சு எங்கே? என்று கேட்கிறார்? ஊஞ்சலாடுகிறார்; பசங்களைக் குலாவுகிறார். உங்களுக்கு மிகவும் வேண்டியவர்களென்று நினைத்து நாங்கள் பலகார வகைகள் கொடுக்கிறோம்; வாங்கியுண்டு, நீங்கள் க்ருஹத்திற்கு வருவதற்கு அரைமணி முன்னே எழுந்து சென்று விடுகிறார். இவர் இன்னாரென்று உங்களுக்குத் தெரிகிறதா?' என்று கேட்டாள். அவ்விருவரும் ஆலோசித்துப் பார்த்து 'எங்களுக்குத் தெரியவில்லையே!' என்று சொல்லி விட்டார்கள். ஆனாலும் அவரைத் தெரிந்து கொள்ள வேணுமென்கிற அவா அவர்களுக்கும் உண்டாயிற்று. 'மறுபடியும் அவர் இங்கு வந்தால் உடனே எமக்குச் சொல்லியனுப்புங்கள்' என்று தாயார் முதலானவர்களிடம் சொல்லி வைத்திருந்தார்கள்.

வழக்கப்படி மறுநாள் அவர் வந்தார். உடனே ஜட்ஜுகளுக்குச் செய்தி தெரிவிக்க, இருவரும் வந்து சேர்ந்தார்கள். அவர்களைப் பார்த்தவுடனே இவர் திடுக்கிட்டார். ஆனாலும் உள்ளத்தைத் தேற்றிக்கொண்டு 'சேச்சு! ஸௌக்கியந்தானா? பாச்சு! ஒன்றுங் குறைவில்லாமலிருக்கிறாயா?' என்று குசலப்ரச்னம் பண்ணினார். 'ஓய்! நீர் யாரென்று தெரியவில்லையே!' என்றார்கள் ஜட்ஜுகளிருவரும். இந்த வழிப்போக்கனோ வென்றால் 'அதென்ன? அதென்ன? அப்படிச் சொல்லிவிட்டீர்களே, இப்படி கூட மறந்து விடலாமா? நீங்களும் நானும் சிறிய தாயார் பெரிய தாயார் பிள்ளைகளல்லவா? ஐச்வரியம் விஞ்சினாலும் இப்படி நெருங்கின உறவைக்கூட மறந்து விடலாமா?' என்கிறான். அவர்களுடைய தாயாரும் கூட நிற்கிறாள். அவளோடு கூடப் பிறந்தார் யாருமிலர். அதனால் அவள் திகைத்து நிற்கிறாள். ஜட்ஜுகள் 'ஓய்! என்ன கேலிபண்ணுகிறீர்? என் தாயாரோடு கூடப் பிறந்தவர்கள் யாருமே யில்லாமலிருக்க என்னவுளறுகிறீர்' என்று கடிந்து பேசினார்கள். அதற்கு அவன் 'அவஸரப்படாதீர்கள், நிதானமாகக் கேளுங்கள், நான் பொய் சொல்லுகிறவனல்ல; நீங்கள் சிறிய தாயார் பிள்ளைகள் நான் பெரியதாயார் மகன்

ஏன்பதை நீங்கள் நம்பும்படி தெரிவிக்கிறேன். உலகில் தங்கை தமக்கைகள் என்று இருவர் எங்கும் பிரஸித்தி பெற்றிருக்கவில்லையா? ஸ்ரீமஹாலக்ஷ்மிக்குத் தங்கை யென்கிற பெயரும், அவட்கு முன்னே பிறந்தவளுக்கு மூதேவி பெத்தம்மா என்கிற பெயர்களும் இல்லையா? தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலையில் "சேட்டை தம்மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரே" என்று ஸாதித்திருப்பது உங்களுக்குத் தெரியாதா? ஜ்யேஷ்டா என்கிற வடசொல்தானே தமிழில் சேட்டை யென்று திரிந்திருக்கிறது. ஜெஷ்டை, ஜெஷ்டை என்று வெறுத்துச் சொல்லுகிறோமே, அந்த மூதேவியைத்தானே சொல்லுகிறோம். அவளைத்தான் நான் பெரிய தாயாரென்கிறேன். தரித்திரனைப் பிறந்த நான் அவளுடைய பிள்ளைதானே. லக்ஷ்மீ புத்திரர்களாகப் பிறந்திருக்கிற நீங்கள் தங்கை பிள்ளைகள் தானே. ஆகவே நீங்களும் நானும் சிறிய தாயார் பெரிய தாயார் பிள்ளைகள் என்கிற உறவில் சேர்ந்தவர்களாக ஆகவில்லையா? ஆலோசித்துப் பாருங்கள், நான் சொன்னது பொய்யா?' என்றான். இதைக்கேட்ட அவர்களுக்கு அபரிமிதமான ஆனந்தமுண்டாயிற்று. "இனிமேல் நீர் எங்குமே போக வேண்டாம்; இங்கேயே எங்களுக்குத் தமையனாகவேயிருந்து கொண்டு ஸௌக்கியமாகவே வாழ்ந்து வாரும்" என்று சொல்லிவிட்டார்கள். இவனும் விசாரமற்று உண்பது முறங்குவதுமாய்ப் போது போக்கி வருகிறான்.

## 27. "ஐயா! டன் வந்துவிட்டான், டன் வந்துவிட்டான்."

ஒரு ஸ்ரீ வைஷ்ணவப் பிள்ளை. அவன் சமையல் செய்வதில் நிபுணன். ஹைகோர்ட் ஜட்ஜாக இருக்கிற ஸ்மார்த்த ரொருவர்க்கு சமையல்காரன் வேண்டியிருந்தது. இந்த வைஷ்ணவப் பிள்ளையை அன்புடன் அமர்த்திக்கொண்டார். இவன் ஸ்ரீவைஷ்ணவனாகையாலே திருமடைப்பள்ளி யென்றும் திருத்துழா யென்றும் திருவாராதனமென்றும்......இப்படி திரு சேர்த்தே பரிபாஷையாக வழங்கி வந்தான். ஸ்மார்த்தரான பிரபுவுக்கு இது பிடிக்கவில்லை. 'ஓய் அய்யங்காரே! உம்முடைய பரிபாஷைகளை உங்களினத்தார் வீடுகளில் வைத்துக்கொள்ளும்; நம்மிடம் இருக்கிற வரையில் திருவும் கிருவும் பேசவேண்டாம்' என்று கட்டளையிட்டார். அப்படியே ஒப்புக்கொண்டான் வைணவ பரிசாரகன். வெகுநாளைய பழக்கத்தை திடீரென்று விட்டுவிட முடியாதாகையால் சில ஸமயங்களில் வாய் தவறி 'திருமண் பெட்டி, திருவிளக்கு, திருக்கண்ணமுது' என்றிப்படி சொல்லிவிடுவன். ஜட்ஜ் கோபம் தாங்காமல் சில சமயம் அபராதமும் விதித்திருந்தார். அதனால் அவன் மிகவும் உஷாராகவேயிருந்து வருகிறான். ஒருநாள் வாசல் காக்கும் ஜவான் லீவ் பெற்றுக்கொண்டு போனான். அன்று ஜட்ஜ் இந்த பரிசாரகனை யழைத்து 'அடே! நம் ஜவான் பொன்னுசாமி இன்று லீவில் போயிருக்கிறான்; அவனுடைய காவல் தொழிலையும் நீ பார்த்துக்கொள்ள வேண்டு மின்று; ஜாக்கிரதை; தூங்கிப்போய் விடாதே; கள்ளன் பள்ளன் யாராவது நுழைந்தால் உடனே என்னிடம் வந்து சொல்லு' என்று திட்டம் செய்துவிட்டு தாம் மாடிமேல் சயனிக்கப் போய்விட்டார். பரிசாரகன் பிரபுவின் கட்டளைப்படி உஷாராக இருந்து வருகிறான். ஜவான் பொன்னுசாமி இன்று ஊரிலில்லை யென்பதைத் தெரிந்துகொண்ட கள்ளன் ஜட்ஜ் வீட்டில் புகுந்து கொள்ளையடிக்க நினைத்து கேட்டில் ஏகிறிக் குதித்து உள்ளே புகுந்ததைத் தெரிந்துகொண்ட பரிசாரகன் இதைப் பிரபுவிடம் தெரிவிக்க மாடிமேல் சென்று 'ஸார் ஸார்! டன் வந்து விட்டான் டன் வந்து விட்டான்' என்று காதின் புரையிலே கத்தினான். திருடன் வந்து விட்டா னென்று சொன்னால் திரு சேர்த்ததற்காகப் பிரபு கோபித்துக் கொள்ளக்கூடும், அபராதம் விதிக்கக்கூடும்' என்றஞ்சி, திருவை விட்டிட்டு 'டன் வந்துவிட்டான், டன் வந்துவிட்டான்' என்று செவியிலே கத்தினான். பிரபுவோ அயர்ந்து தூங்குகிறார். இவன் கத்தினது அவர்க்கு அர்த்தமாகவில்லை. இவன் ஏதோ சொல்லித் தூக்கத்தைக் கெடுக்கிறானே யென்னுங் கோபத்தினால் 'போடா வேலையற்றவனே' யென்று திரஸ்காரமாகச் சொல்லிவிட்டார் பிரபு. அதன்

மேல் இவன் கீழிறங்கிப் போக அஞ்சி மேலேயே ஒரு பக்கத்தில் படுத்துக்கொண்டுறங்கினன். உள்ளே புகுந்த கள்ளன் கையில் கிடைத்த துணிமணிகளைச் சுருட்டிக் கொண்டு போய்விட்டான். பின்மாலை பிரபு எழுந்தபோது இந்த பரிசாரகனை மேலே ஒருபுறத்தில் படுத்திருக்கக் கண்டு அதட்டி யெழுப்பி 'அடே! நான் சொன்ன தென்ன? நீ செய்த தென்ன? இங்கு ஏதுக்குப் படுத்திருக்கிறாய்?' என்றார். அவன் 'இல்லை ஸார், இரவு 12 மணிக்கு டன் வந்தான்; உடனே நான் தங்களிடம் வந்து கத்தியும் தாங்கள் கவனிக்கவில்லை, கீழே என்னென்ன சாமான் கொள்ளை போய் விட்டதோ தெரியவில்லை; ஓடிச்சென்று பாருங்கள்' என்றான். அதற்கு ஜட்ஜ் 'என்னடா உளறுகிறாய்; டன் வந்தானென்றால் என்ன அர்த்தம்? இது என்ன பாஷை?' என்கிறார். தாங்கள் எதிலும் திரு சேர்த்துச் சொல்லக்கூடாதென்று கடுமையாகக் கட்டளை யிட்டிருக்கவில்லையா? திருடன் வந்தானென்று சொன்னால் என் தலை போய்விடாதா? என்கிறான் பரிசாரகன். சோர ப்ரவேசமாய் விட்ட தென்று தெரிந்து கொண்ட ஜட்ஜ் வேகமாகக் கீழே யிறங்கிப் பார்த்தவாறே பலவாயிரம் ரூபா பெறுமான சாமான்கள் களவு போயிருக்கக் கண்டார். பரிசாரகனைக் கடிந்து பேச முடியாதபடி தணறுகிறார். திருவில் கொண்டபகை திருவை யிழக்க நேர்ந்ததென்று தெரிந்து கொண்டாரோ இல்லையோ அறியோம். .... *

## 28. எங்குப் போனாலும் உன்னிழவுதான்.

மஹா குணசாலியான வொருவர்க்கு மிகவும் கெட்டகுண முடைய மனைவி யொருத்தி வாய்த்தாள். அவள் பர்த்தாவை த்ருணமாக நினைத்து வார்த்தை சொல்லுபவள். மரியாதை யென்பது அடியோடு கிடையாது. நாயே பேயே யென்றும் பேசுவள். பர்த்தா பரம ஸாதுவாகையாலே எல்லாவற்றையும் ஸஹித்திருப்பர். இவளுடைய துஷ்டத் தன்மை வர வர வளர்ந்து விட்டது. அவராலும் ஸஹிக்க முடியவில்லை. அவ்வூரில் நாலு பக்கங்களிலும் நல்ல பிரவசனங்கள் நடந்து வருகின்றன. ஒரு பக்கத்தில் வான்மீகி ராமாயணம். மற்றொரு பக்கத்தில் கம்பராமாயணம். இன்னொரு பக்கத்தில் திவ்யப் பிரபந்தம். வேறொரு பக்கத்தில் பெரியார்களின் வரலாறுகள். என்றிப்படி நான்கு பக்கங்களிலும் நான்கு வகைப் பிரவசனங்கள் நடைபெற்று வருவதால் இவள் அந்த கோஷ்டிகளிற் சென்று காது கொடுத்துக் கேட்டாளாகில் தீய குணம் தொலைந்து நல்ல குணம் படியும் என்று நினைத்த பர்த்தா 'அம்மா, ஸமீபத்திலேயே சில விடங்களில் கதை நடக்கிறது, போய்க் கேட்டுவா' என்றார். அவளுக்குச் சில தோழிகளுண்டே, அவர்களை யிட்டும் அழைக்கச் செய்தார். கதை கேட்டு வருவோமென்று அவளுக்கும் ருசி யுண்டாகி ஒருநாள் ராமாயணம் கேட்கப் போனாள். அன்று அயோத்யா காண்டத்தில் 117-ஆவது ஸர்க்கம் பிரவசனமாகிறது. ஸ்ரீ ராம லக்ஷ்மண ஸீதைகள் அத்திரி பகவானுடைய ஆச்ரமம் சென்று சேர்ந்திருக்கிறார்கள். அத்ரி முனிவரின் தேவியார்க்கு அநஸூயை யென்று பெயர். அத்தேவியாரை ஸீதா பிராட்டி வணங்கி வழிபட்டிருக்கையில் மிகச் சிறந்த பதிவிரதா தர்மோபதேசம் (பிராட்டிக்கு) நடைபெறுகிறது. 'ஸீதே! நீ ராஜ போகங்களை யெல்லாம் விட்டு இராமனைப் பின்பற்றி வனவாஸஞ் செய்வது உன்னுடைய பாக்கியங்களில் மேலான பாக்கியமாகும். கணவன் நாட்டிலிருப்பினுமாம்; காட்டிலிருப்பினுமாம்; தனிகனாகவுமாம்; தரித்ரனாகவுமாம்; ஸுகுணனாகவுமாம்; துர்க்குணனாகவுமாம்; ஸுரூபியாகவுமாம்; குரூபியாகவுமாம்; மாதர்களுக்குக் கணவனே பரமதெய்வம். ஸீதே! நீ இப்பொழுது போலவே எப்பொழுதும் கணவனை யநுவர்த்தித்துப் பதிவிரதைகளில் மேம்பட்டிருப்பாயாக' என்று அநஸூயாதேவி உபதேசிப்பதைப் பௌராணிகர் பல பல த்ருஷ்டாந்தங்களுடன் பன்னிப் பன்னி யுரைத்தார். அதைக் கேட்டுக் கொண்டு வீடுவந்து சேர்ந்தாள்.

மறு நாள் மாலை கம்பராமாயணப் பிரசங்கத்திற்குச் சென்ருள். அன்று அங்கு சுந்தரகாண்டத்தின் முடிவு திருவடி தொழுத படலம் நடைபெறுகிறது. இலங்கையில் பிராட்டியைக் கண்டு திரும்பிய திருவடி இராமபிரானிடம் வந்து விண்ணப்பஞ் செய்வது கூறுகையில் "விற்பெருந்தடந்தோள் வீர! வீங்கு நீரிலங்கை வெற்பில், நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டேனல்லேன், இற்பிறப்பென்ப தொன்றும் இரும் பொறை யென்ப தொன்றும், கற்பெனப்படுவதொன்றும் களி நடம்புரியக் கண்டேன்" என்கிற செய்யுளின் பிரசங்கம் பிரபலமாக நடைபெறு கிறது. இராமா! நான் அசோகவனத்தில் சீதையைக் காணவில்லை; அவளுடைய உயர்குடிப் பிறப்பு பொறுமை கற்பு நிலை என்பவற்றைத் தான் கண்டேன் என்கிருர் திருவடி. இதைப் பன்னி யுரைக்கிருர் பண்டிதர். இதையுங் கேட்டு வீடுவந்து சேர்ந்தாள்.

மறுநாள் மாலை திவ்யப் பிரபந்த காலக்ஷேபங் கேட்கச் சென்ருள். அன்று அங்கு ஸ்ரீகுலசேகராழ்வாருடைய பெருமாள் திருமொழியில் திருவித்துவக் கோட்டுப் பதிகத்தில் இரண்டாவது பாசுரம்—"கண்டா ரிகழ்வனவே காதலன்தான் செய் திடினும், கொண்டானை யல்லால் அறியாக் குலமகள்போல்" என்பது வியாக்கி யானிக்கப்படுகிறது. பாசுரமோ வெள்ளையாகவுள்ளது. பல நிதர்சனங்களைக் கொண்டு விவரிக்கிருர் காலக்ஷேப ஸ்வாமி. அதையுங் கேட்டு வீடு வந்து சேர்ந்தாள். மறு நாள் மாலை பெரியவர்களின் வரலாறுகள் உபந்யஸிக்கு மிடம் சென்ருள். அன்று அங்குச் சொல்லப்பட்ட வரலாறு என்னவெனின்; ஒரு பெரியவர் திருவள்ளுவரிடம் கற்புநிலை முதலிய சில தரும நுட்பங்கள் கேட்க அவருடைய இல்லந் தேடி வருகிருர். அவரது கிருஹத்தில் இடைகழி வாசலில் கம்பிக் கதவு தாளிட்டிருந்தது. உள்ளே புக முடியாவிட்டாலும் கம்பிக் கதவாகையாலே புழைக்கடை வரையில் நன்ருகப் பார்க்க முடிகிறது. திருவள்ளுவருடைய தேவியார் கிணற்றில் தண்ணீர் தூக்குவதற் காகக் குடத்தைத் தாம்பிலே கட்டி விட்டுத் தண்ணீர் மொண்ட குடத்தை யிழுத்துக் கொண்டிருக்கிருள். கிணற்றின் பாதியளவில் குடம் வருகையில் கதவண்டை நிற்கிறவர் பண்ணின சத்தங்கேட்டு அந்த அம்மை கதவைத் திறக்க ஓடி வருகிருள். குடம் கரை சேரவில்லை, கிணற்றினுள்ளும் சேரவில்லை. பாதியிலேயே நிற்கிறது. இந்த அம்மை தாம்பை அப்படியே விட்டிருக்கிருள். தாம்பும் குடத்துடனே அப்படியே நிற்கிறது. வந்த பெரியவர் இந்த அதிசயத்தைக் கிணற்றருகில் ஓடிச் சென்று கண்டு வியப்புற்றிருக்கிருர்.

திருவள்ளுவர் உள்ளே பழையது உண்கிருர். [இரவில் தண்ணீரில் இட்டு வைத்துக் காலையில் உண்ணப்படுகிற குளிர்ச்சியான பிரஸாதத்திற்குப் பழையது என்று பெயர்.] அதை அவர் உண்ணும்போது தேவியாரை விளித்து 'சோறு சுடுகிறது, விசிறிகொண்டு விசிறு' என்ருர். அவளும் 'பழையஸாதம் சுடுகிறதோ?' என்று ஏசிப் பேசாமல் அப்படியே விசிறுகிருள். பதி சொன்னபடியே செய்வது தான் பதிவிரதா தருமமென்றும், இதனல் தான் இந்த அம்மைக்குத் தண்ணீர்க் குடமும் தாம்புடனே அப்படியே நிற்கிறதென்றும், வந்த பெரியவர் தாமே தெரிந்து கொண்டு வந்த காரியமாயிற்றென்று சொல்லி விடைபெற்றுச் சென்ருர். இவ் வரலாறு அன்று அங்கே பரக்க வுரைக்கப்பட்டது. இதையுங் கேட்டு வீடு வந்து சேர்ந்தாள் பரமஸாத்விகருடைய கொடிய மனைவி. நாலு நாளும் இவள் கதை கேட்கப் போமிடங்களையும் அங்கங்கே நடக்கிற கதைகளையும் பர்த்தா தெரிந்து கொண்டே வருகிருர். இக் கேள்விகளால் மனைவியின் மனம் கொஞ்சம் பதஞ் செய்திருக்குமென்று நினைத்த அவர் ஐந்தா நாளில் அவளை நோக்கி 'கதைகள் கேட்டு வருகிருயே, எப்படி யிருக்கிறது?' என்று கேட்டார். அதற்கு அவள் "எங்குப் போனலும் உன்னிழவு தான்" என்ருளாம். எந்த காலக்ஷேபத்திற்குச் சென்ருலும் பர்த்தாவின் பெருமை தான் செவியில் விழுகிறது என்று நெஞ்சு கனிந்து சொல்லாமல் 'எங்குப் போனலும் உன்னிழவுதான் அழச் சொல்லுகிறது'

என்றுள் இந்த பரபாவி. "கற்பூரப் பாத்திகட்டிக் கத்தூரி யெருப்போட்டுக் கமழ்நீர் பாய்ச்சி, பொற்பூர வுள்ளியினை விதைத்தாலும் அதன் குணத்தைப் பொருந்தக் காட்டும்" என்ற பாட்டை பர்த்தா உபந்யஸித்து நின்றார். .... .... *

## 29. வ்யக்திக்கு கௌரவமில்லை, வேஷத்திற்கு கௌரவம்.

ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தைச் சொல்லத் தோன்றிய நூல்கள் ஆந்தர வேஷங்களிருக்க வேண்டும்படியும் பாஹ்ய வேஷங்களிருக்க வேண்டும்படியும் ஆக இருவகை லக்ஷணங்களையும் செவ்வனே கூறியுள்ளன. "ந சலதி நிஜவர்ண தர்மதோ யஸ் ஸமமதிராத்மஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே" இத்யாதி வசனங்கள் ஆந்தர வேஷமிருக்க வேண்டும்படியைத் தெரிவித்தன. "யே கண்ட லக்ந துலஸீ நலிநாக்ஷ மாலா:" இத்யாதி வசனங்கள் பாஹ்ய வேஷமிருக்க வேண்டும்படியைத் தெரிவித்தன. சிலர் சொல்லு வதாவது 'ஆந்தர லக்ஷணம் போதுமானது. வெளிவேஷமேதுக்கு? அது பகல் வேஷமல்லவா? உலகத்தை வஞ்சிப்பதற்கல்லவா வெளிவேஷம்' என்று. இங்ஙனே பலர் சொல்லுவதுண்டு. அவர்கள் கவனிக்க வேண்டிய கதை இது.

ஒரு போலீஸ் டிஸ்ட்ரிக்ட் ஸூபரிண்டான்டண்டு (D. S. P.) அதிகாரி. அவர் ஓரிடத்தில் சென்று சோதனை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஒரு குறுந் தெருவில் போக வேண்டியிருந்தது. தன்னுடைய ட்ரஸ்களைக் களைந்து பெட்டியில் வைத்து விட்டார் இடம்போய்ச் சேர்ந்த பிறகு அணிந்து கொள்ளலாமென்று. சாதாரணத் துணியை அரையில் கட்டிக்கொண்டு மேலே ஒரு டவல் போட்டுக் கொண்டு ஒற்றை வண்டியில் உட்கார்ந்து செல்லுகிறார். போகவேண்டிய குறுந் தெருவில் வண்டி திருப்பிற்று. அந்தத் தெருவானது 2 பர்லாங்கு நீளமுள்ளது. ஒரு வண்டிதான் செல்லும். இரண்டு வண்டி செல்ல இடம் கிடையாது. எதிரே ஒரு வண்டி வந்து விட்டது. அது ஒன்றரை பர்லாங்கு தூரம் வந்தாய்விட்டது. D. S. P. யின் வண்டி சிறிது தூரமே சென்றிருக்கிறது இரண்டில் ஏதாவதொரு வண்டி திரும்பியாக வேண்டும். எதிர் வண்டிக்காரன் வெகுதூரம் வந்துவிட்டபடியால் அவன் திரும்புவது நியாயமன்று. D. S. P. வண்டிக்காரன் சிறிது தூரமே வந்திருப் பதால் இவன்தான திரும்பியாக வேண்டும். நம் வண்டியில் D. S. P. உட்கார்ந்திருக் கிறார் என்ற செருக்கினால் இவன் எதிர் வண்டிக்காரனை அதட்டுகிறான். 'திருப்பு வண்டியை, பேசாதே' என்று கத்துகிறான். அந்த வண்டிக்காரனும் வண்டியிலுள்ள வர்களும் பிலுபிலு வென்று சண்டைக்கு வந்து விட்டார்கள். இவனோ 'வீணுக்குக் கத்தாதீர்கள், என் வண்டியிலிருப்பவரை யாரென்று நினைத்தீர்கள்! ஜாக்கிரதை! தலைபோய்விடும்' என்று வெருட்டுகிறான். அவர்கள் இந்த வண்டியிலிருப்பவரை உள்ளபடி தெரிந்துகொள்ள வழியில்லாமையால் 'இவனோரோவொரு வழிப்போக்கன்' என்று நினைத்து இந்த வண்டியைப் பின்னுக்குத் தள்ளத் தொடங்கினார்கள். அப் போது அந்த வண்டிக்காரன் 'வேண்டாம் வேண்டாம்; ஐயா கோவங் கொள்ளுவார்' என்கிறான். 'இந்த அய்யாவைப்போல் ஆயிரம் அய்யாவைப் பார்த்திருக்கிறோம், போடா' என்கிறார்களவர்கள். பிறகு அய்யாவே 'நான் D. S. P. ஜாக்கிரதை' என் கிறார். அவர்களோ 'உன்னைப்போல் ஆயிரம் D. S. P. களைப் பார்த்திருக் கிறோம், போடா' என்கிறார்கள். உடனே D. S. P. பெட்டியைத் திறந்து ட்ரஸ்களை யெடுத்து அணிந்து கொண்டு பிரம்பையும் ஏந்தி நின்று 'என்ன சொன்னீர்கள்? என்ன வுளறினீர்கள்?' என்றார். 'இப்படியிருந்து சொல்லுங்கோ சாமீ!' என்று சொல்லி கும்பிட்டு ஒரே நிமிஷத்தில் வண்டியைப் பின்னுக்குத்தள்ளி வழி விட்டா யிற்று. அன்பர்களே! வெளிவேஷத்தின் பெருமையைக் கண்டீர்களா? லௌகி கர்களின் வேஷங்கள் வேறு, வைதிகர்களின் வேஷங்கள் வேறு. லௌகிக வேஷத் திற்கு லௌகிகர்கள் அஞ்சுவர்கள். வைதிக வேஷத்திற்கு "த்ரவந்தி தைத்யா: ப்ரணமந்தி தேவதா:, நச்யந்தி ரக்ஷாம்ஸி அபயாந்தி ச அரய:." ... ... *

ஸ்ரீமதுபயவே. ஸுப்ரஸித்த வித்வந்மணி.

## நாவல்பாக்கம் நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி

# திருநாடலங்கரித்த செய்தி

शोभकृच्छरदि मासि तुलायां शुक्लधर्मतिथियुग्विधुवारे ।
श्रीनृसिंह गुरुराड् विबुधानामग्रणी रगमदच्युतपादम् ॥
काञ्चीभाग्यं मूर्तमाचार्यरत्नं शिष्टाग्र्याणां सात्त्विकानां निधानम् ।
नावल्पाकम् स्वामिनाम्ना प्रसिद्धं विद्वद्रत्नं ज्योतिरेकं तिरोभूत् ॥

वेदे व्यासमिवोत्थितं स्मृतिततिष्वन्यं वसिष्ठं मुनिं
वेदान्ते यतिराजदेशिकनिभं न्याये कणादं नवम् ।
आचारे सकलर्षिसंघवपुषं श्रीमन्नृसिंहं गुरुम्
नावल्पाककृतोदयं दिवि सदा पश्यन्ति ते सूरयः ॥

ஸ்ரீ வைஷ்ணவர்கள் திரளிலும் வித்வான்களின் கோஷ்டிகளிலும் ஸ்ரீ நாவல் பாக்கம் ஸ்வாமி திருநாமத்தைக் கேள்விப்படாதாரில்லை. ஆசார்ய லக்ஷணமான ஜ்ஞாநுஷ்டானங்களில் தலைசிறந்து விளங்கும் மஹான் இனி இந்நிலவுலகில் இல்லை யென்று துணிந்து சொல்லலாம் படியான பெருமை வாய்ந்தவர் இம் மஹா புருஷர். ஸ்ரீ காஞ்சீபுரியின் பாக்கியமே வடிவெடுத்தவரென்று அடியேன் போல்வார் திண்ண மாக எண்ணும் படியான வீறு வாய்ந்த இப் பெரியார் நிகழும் சோபக்ருது ஸூ ஐப்பசித் திங்களில் சுக்ல ஏகாதசியும் பேயாழ்வார் திருவவதார நன்னாளும் கூடின திங்கட்கிழமை யன்று (28—10—'63) லீலாவிபூதியினின்று நித்ய விபூதிக்கெழுந் தருளலாயிற்று.

"**अधीतमध्यापितमार्जितं यशः**" என்னும்படி விளங்கின இம் மஹா புருஷர் எண்பத்தைந்து திருநக்ஷத்ரம் குறையாமலும் அதற்கு மேலாகவும் "வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்கிற ஆழ்வார் மங்களா சாஸனத்தை அந்வர்த்தமாக்கியருளி இவ்விபூதியை அலங்கரித்திருந்தது ஸ்ரீ வைஷ்ணவத் திரளின் மஹத்தான பாக்கியமென்னத் தட்டில்லை. ஸ்ரீ பாஷ்யகாரர் எம்பெருமானுக்கு இட்டருளும் விசேஷணங்களில் "**अहरह रनुष्ठीयमाणवर्णाश्रमधर्मानुगृहीततदुपासनरूपतत्समाराधनप्रीतः**" என்ற‌ொரு விசேஷணம் மிகச் சிறந்து விளங்குகின்றது. வஸ்து ஸ்திதியில் அந்த விசேஷணம் இந்த மஹாஸ்வாமியின் அநுஷ்டான விசேஷங்களிலேயே நறுமணம் பெற்றதென்றால் மிகையாகாது. ஏறக்குறைய ஏழெட்டு வருஷங்களாகவே ஜரையின் ஸாம்ராஜ்யம் ஸ்வாமி பக்கலில் தலைகாட்டியிருந்துங்கூட நிர்யாண பர்யந்தமாக அநுஷ்டாந லோபம் சிறிதுமில்லையென்பதை அடியேன் ஸாக்ஷாத் கரிக்கும் பாக்கியம் பெற்றவன். ஓர் ஏழெட்டு நாள் அநுகல்பாநுஷ்டானமிருந்திருக்கலாமென்று சிலர் நினைக்கிலும் இதுவொரு விஷயமன்று. * பொலிக பொலிகவிலே "கொன்றுயிருண்ணும் விசாதி பகைபசி தீயனவெல்லாம், நின்றிவ்வுலகில் கடிவான் நேமிப்பிரான் தமர் போந்தார்" என்று போற்றப்பட்ட ச்வேதத்வீப வாஸிகளில் ஸ்வாமியும் ஒருவர் என்றே ப்ரதிபத்தி பண்ணலாயிருந்தது.

ஸ்ரீ ஸ்வாமி அடியேனைக் காட்டிலும் பதினைந்து திருநக்ஷத்ரம் பெரியவர். ஆயினும் "கூரணிந்த வேல்வலவன் குகனோடுங்கங்கை தன்னில் சீரணிந்த தோழமை கொண்டது" என்றாப் போலவும் "**दासस्सखा**" என்றாப் போலவும் தொண்டனை

முறைக்கு மேலாகத் தோழுகவும் திருவுள்ளம் பற்றும் படியிருந்தது அடியேனுடைய பெரும்பாக்கியம். உண்மையில் அடியேனுக்கு இரண்டு பாக்கியம் யாத்ருச்சிகமாக நேர்ந்ததுண்டு; கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. இஞ்சிமேட்டழகிய சிங்கர் பூர்வாச்ரமத்தில் அடியேனுடைய வீதியில் வாழ்ந்தருளினது முதல் பாக்கியம். அதை யிழக்க நேர்ந்தவுடனே அந்த இழவு தோன்ருதபடிக்கு ஸ்ரீ ஸ்வாமி இத்திரு வீதியிலேயே நித்யவாஸம் ஸங்கல்பித்து எழுந்தருளினது அதனின் மிக்க இரண்டாவது பாக்கியம். இதையும் இழக்க நேர்ந்துவிட்டது. ஸ்ரீ ஸ்வாமிக்கு வேதத்திலும் வேதமோதினவர்களிடத்திலும் அபரிமிதமான அன்புடைமை விச்வப்ரஸித்தம். ஒரு வார்த்தையை அடிக்கடி ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன்; (அதாவது) அண்ணு! ஏகாந்தமான வீதிகளில் வாஸம் பண்ண ருசியிருந்தும் இந்த வீதியிலே க்ருஹம் வாங்கி இங்கேயே வஸிக்க ஆசைப்பட்டது தேவப்பெருமாளை உள்ளே சென்று ஸேவிக்க சக்தியில்லாமற் போனாலும் வீதியில் ஸேவிக்க நேருங் காலங்களையாவது இழக்காமல் ஸேவிக்க என்பது ஸாமான்யமான உத்தேசம்; இந்த பூமண்டலத்திற்கு துர்லபமான நித்ய திருவீதி ப்ரதக்ஷிண வேதபாராயண கோஷ்டியை ஸேவிப்பதுதான் எனக்கு ஆந்தரமான உத்தேச்யம் என்று. திருவுள்ளங் கனிந்த இந்த ஸ்ரீ ஸூக்தியை ஒரு விசையன்று, இருவிசையன்று, நூறு விசைக்கு மேல் ஸாதிக்கக் கேட்க நேர்ந்தது. பாராயண கோஷ்டி போகும்போது அஞ்ஜலி பந்தத்துடனும் கண்ணீர்ப் பெருக்குடனும் நின்றருளுந் திருக்கோலம் நெஞ்சுள்ளும் கண்ணுள்ளும் நீங்ககில்லாது. மஹோத்ஸவாதிகள் காரணமாகச் சில நாட்களில் பின்மாலை கோஷ்டி நடத்த முடியாமற் போய்விடும்; அத்தகைய நாட்களில் வீதியில் போகிறவர்களையெல்லா மழைத்து 'இன்று என்ன அநுபபத்தி? ஏன் கோஷ்டி வரவில்லை' என்று கேட்டருள்வது ஆச்சரியமாயிருக்கும்.

முதன்முதலாக ஸ்வாமியின் க்ருபையை அடியேன் பெற்றபோது "நாவல் பாக்கத்திலுள்ள தடாகம் கொஞ்சம் ஜீர்ணோத்தாரணத்தை அபேக்ஷிக்கிறது. நகரத்தில் யாருக்காவது இதில் ஆபிமுக்யம் உண்டு பண்ணமுடியுமா?" என்று கேட்டருள, ஸ்வாமியின் திருவுள்ளக் குறையை நீக்கியருளத் திருவுள்ளம் பற்றின தேவப்பெருமாள் ஒரு வாரத்திற்குள்ளாகவே அடியேனைக்கொண்டு [சென்னையில் ஒரு சாரிடி மூலமாக] நீக்கியருள, அதிலிருந்தும் ஸ்வாமியின் பரமக்ருபை வளர்ந்திட்டது. அப்போது தேவப்பெருமாள் வைசாகோத்ஸவத்தில் கங்கை கொண்டான் மண்டப வாசலில் பல வைதிகர்களின் முன்னிலையில் அடியேனை அருகே யழைத்தருளி "**धन्वन्निव प्रपा असि**" என்பது இன்று வேதபாராயணத்தில்வந்தபோது உன்னை நினைத்தேன் என்று ஸாதித்து அதை அரைமணி காலம் விவரித்தருளினது இன்று நேற்று போலுள்ளது. இங்ஙனமாக அடியேன் நினைந்து நினைந்து உருகக் கூடிய ஸந்தர்ப்பங்கள் ஒன்றன்று, இரண்டன்று.

ஸ்வாமியின் ஸ்தானத்தைப் பூர்த்தி பண்ணக்கூடிய பெரியார் பேரருளாளனுடையவும் பெருந்தேவித் தாயாருடையவும் கருணாரஸவாஹி வீக்ஷணோர்மிகளால் அவதரிக்கவேணுமென்னும் பிரார்த்தனையுடன் இந்த நிர்வேத விஜ்ஞாபனத்தை நிறுத்திக்கொள்ளுகிறேன்.

**सिद्धं सत्सम्प्रदाये स्थिरधियमनघं श्रोत्रियं ब्रह्मनिष्ठम्**
**सत्त्वस्थं सत्यवाचं समयनियतया साधुवृत्त्या समेतम् ।**
**इत्याद्याचार्यसूक्तेरनघमनुपमं लक्ष्यमाचार्यवर्यम्**
**शान्तं दान्तं नृसिंहाभिधगुरुतिलकं कुत्र वीक्षेय भूयः ॥**

தாஸாநுதாஸன், ஸ்ரீ வைஷ்ணவ தாஸன்,

*1—11—1963.* } **பிரதிவாதி பயங்கரம். அண்ணங்கராசார்ய தாஸன்.**